# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, மீட்பரும், உலக இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

நம் மத்தியில் ஆண்டவரின் ஊழியத்தினை செய்த உத்தமர்களை அடையாளம் கண்டு, இருளிலே மறைந்து கிடந்த அவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தை வெளிச்சத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்ற பெரிய ஆவலோடு கூட இவ்வூழியத்தினை ஆரம்பித்தோம். ஆரம்பித்த நாள் முதற்கொண்டு மிக சிறப்பான ஆதரவையும், உற்சாகத்தையும் கொடுத்து வரும் எழுத்தாளர்கள், விளம்பரதாரர்கள் மற்றும் அனைவருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இந்த மாதத்தோடு கூட வரலாற்றுச் சுவடுகள் மாத இதழ் ஒரு வருடத்தை நிறைவு செய்கின்றது என்பதை மகிழ்ச்சியோடு கூட தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

உங்கள் பகுதியில் பணி செய்த மிஷனெரிகள், குருவானவர்கள், சபை ஊழியர்கள் மற்றும் சுதேசி ஊழியர்கள் என வெளி உலகிற்கு தெரியாதவர்களை மற்றவர்களுக்கு ஆய்வு மூலம் அறிமுகப்படுத்த அன்போடு கேட்டுக் கொள்ளுகின்றேன். வரலாற்றுச் சுவடுகள் புத்தகம் தொடர்ந்து வெளிவர ஜெபித்துக் கொள்ளுங்கள். உங்கள் நண்பர்களுக்கு இப்புத்தகத்தினை அறிமுகப்படுத்தி அவர்களையும் சந்தாதாரர்களாக இணையுங்கள்.

ஜூன் மாதம் 21ம் தேதி "உலக இசை" தினமாக கொண்டாடப்படுகிறது. எனவே கிறிஸ்தவ இசையில் பெரும்பங்களித்த உன்னதர்களைச் சிறப்பு செய்யும்படியாக, "இசை உலகில் கிறிஸ்தவர்களின் பங்கு" என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகளை அனுப்ப கேட்டுக் கொள்ளுகின்றேன். ஜெபத்தாலும், பொருளுதவியினாலும் இவ்வூழியத்தினைத் தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

**மன்னா செல்வகுமார்**


கிறிஸ்தவ **வரலாற்றுச் சுவடுகள்**

**பதிப்பாசிரியர்** மன்னா செல்வகுமார்

**வடிவமைப்பு** சுஜித்.S

**கௌரவ ஆசிரியர்கள்**

டாக்டர். சாமுவேல் வசுந்தரன் சீனிவாசகம்
டாக்டர்.ஜஸ்டின்
Rt.Rev.Dr.L.ஜோசப் மோகன் குமார்
அருள்திரு.லாசரஸ் செல்வநாதன்
பேராசிரியர்.மோ.மைக்கேல் பாரடே
அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்
அருள்திரு. பிலிப் கே.மல்லி
அருட்திரு.பேராசிரியர். மா. தேவராஜ்
அருள்திரு. ஜாண் சாமுவேல்
அருள்திரு. இர்வின் ஞானமுத்து
அருள்திரு. கிப்சன் ஜான்தாஸ்
கிங்ஸ்லி மோசஸ் ஜேசுதாஸ்
G. ஆல்வின் ஜேக்கப்
ஜே.பர்னபாஸ்
Dr. ஜான்சி பால்ராஜ்

**ஆசிரியர் குழு**

அருள்திரு.முனைவர் ச.இராஜசேகரன்
J.ஜான் ஞானராஜ்
மைக்கேல்
ஆர்.ஆர்.சீனிவாசன்
Dr.கனகராஜ்

**செய்தி ஆசிரியர்கள்**

ரமேஷ், ஈரோடு
டேனியல் மோகன்ராஜ், சென்னை
ஜெபர்சன் ராஜசேகர், திருநெல்வேலி
ஜெபராஜ் . I J

**கௌரவ சட்ட ஆலோசகர்**

சாமுவேல் ஆபிரகாம் .D

**சட்ட ஆலோசகர்**

டாக்டர். ஐ டி கிங் பால்



**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

**விளம்பரம் மற்றும் சந்தா விபரங்களுக்கு**

christianhistorical@gmail.com
+91 90420 15221
+91 91767 80001
+91 75388 12218
04633 290401

# ஆயர் சொ. ஆரோன் (1698-1745)

## (புராட்டஸ்டன்ட்)

**'இந்தியாவின் முதல் அபிஷேகம் பெற்ற குருவானவர்'**

**'ஆசியாவின் முதல் குடிமகனாகிய புராட்டஸ்டன்ட் ஆயர்'**

**'உலகின் முதல் ஐரோப்பியரல்லாத புராட்டஸ்டன்ட் பாதிரியார்'**



**ஆசிய புராட்டஸ்டன்ட் குருமார்களின் தந்தை:-**

ஆசியாவின் முதல் புராட்டஸ்டன்ட் (சீர்திருத்தல்), டேனிஷ்-ஹல்லே புராட்டஸ்டன்ட் (லூத்தரன்) மிஷனரியாகிய ஆயர் சீகன்பால்கு (1682-1719), ஆறுமுகம் பிள்ளை (எ) ஆரோனுக்கு 1718ம் ஆண்டு ஆகஸ்டு 5ம் நாள் ஞானஸ்நானம் கொடுத்து 'ஆரோன்' என்ற பெயரைச் சூட்டினார். சீகன்பால்குவின் மனைவி 'மரியா டாரத்தி' அம்மையார் ஆரோனுக்கு ஞானத்தாய் (God-mother).

1733ம் ஆண்டு, டிசம்பர் 28ம் நாள் இந்திய-ஐரோப்பிய உறவின் வரலாற்றில் ஒரு மைல்கல்லாக அமைந்தது. அந்நாளில் தான் ஆறுமுகம் பிள்ளை என்ற ஆரோன் முதன்முதலில் ஐரோப்பியருக்கு நிகராக சீர்திருத்தலின் சபையின் குருவாக அபிஷேகம் பெற்றார். உலகின் முதல் ஐரோப்பியரல்லாத (புராட்டஸ்டன்ட்) திருச்சபையின் ஆயரானார். இந்த வரலாற்று நிகழ்வு நாகை மாவட்டம், பூம்புகார் தொகுதிக்குட்பட்ட தரங்கம்பாடியில் உள்ள புது எருசலேம் ஆலயத்தில் நடைபெற்றது. இதைப்பார்த்து இங்கிலாந்து, டென்மார்க், ஜெர்மனி உள்ளிட்ட நாடுகள் சிலிர்த்தது, அவர்களுடைய புருவங்கள் உயர்ந்தன. வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் இந்திய மற்றும் ஆசிய திருச்சபைகளில் உண்டாயின. ஆயர், ஆரோன் அவர்கள் புது எருசலேம் ஆலயத்தில் 1729 முதல் 1733 வரை உபதேசியாராகவும் பிறகு முதல் இந்திய நாட்டையராக 12 வருடம் பணியாற்றினார். பின்பு 'நிமோட்டிஸில்' என்ற நோயால் துன்புற்று 1745ம் ஆண்டு, ஜீன் மாதம் 25ம் நாள் தன்னுடைய 47 வயதில் காலமானார். அநேக மக்களை கடவுளிடத்தில் கொண்டு வந்தார். மற்ற மதத்தினரிடத்தில் அன்பு காட்டினார். ஐரோப்பிய மிஷனரிகள் போக முடியாத இடத்தில் கூட தைரியமாக தன் குதிரையை எடுத்துக்கொண்டு மக்களிடத்திற்கு சென்று உதவி செய்தார். ஒரு மூட்டையில் தன்னுடைய சமையல் பாத்திரங்களையும், லாந்தர் விளக்கையும் சுமந்து கொண்டு இயேசுவினுடைய அன்பைப் போதித்தார். இவ்வாறாக அவர் ஒரு சமாதானத்தை உருவாக்குபவராகவும், சொற்பொழிவாளராகவும், மொழி பெயர்ப்பாளராகவும், திருச்சபையின் குருவாகவும் திகழ்ந்து நமக்கும் நமக்கு பின்வரும் சந்ததியாருக்கும் குறிப்பாக ஆயர்களுக்கும் ஒரு பாடமாக இருப்பது நாம் அறிந்த உண்மையே.

**ஆரோனுடைய ஆரம்பகால வாழ்க்கை:-**

ஆறுமுகம் பிள்ளை கடலூரில் உள்ள தேவினாம்பட்டிணத்தில் 1698ம் ஆண்டு பிறந்தார். ஆங்கிலேயர் காலத்தில் இது Fort St.David என்றழைக்கப்பட்டது. இவருடைய தந்தையார் சொக்கநாத பிள்ளை தாயார் 'நல்லதாய்' (ஞானஸ்நானம் பெற்றபிறகு) சைவ வழிபாட்டை பின்பற்றினவர்கள். சைவ வேளாள சமூகத்தை சேர்ந்தவர்கள். நல்ல வசதியான குடும்பம். சொக்கநாத பிள்ளை கிழக்கிந்திய கம்பெனியின் வணிகராக இருந்தவர். இவர் வைராக்கியமாக இந்து மதத்தில் இருந்து 1732ம் ஆண்டு மரித்துப் போனார்.

இந்திய நாட்டிலேயே முதன்முதலில் 'ஜோசப் கோலட்' என்றவர் கடலூரில் 1717ம் ஆண்டு 'தொண்டு பள்ளியை' (Charity School) தொடங்கினார். அந்த பள்ளியின் எதிரில்தான் ஆறுமுகத்தின் வீடு. இந்த பள்ளிக்கு அவர் போக்குவரத்துமாக இருந்தார். இதைப் பார்த்த அந்தப் பள்ளியின் நிர்வாகி 'சவரிமுத்து' என்பவர் அதனை திறந்து வைத்த

சீகன்பால்குவிடம் அறிமுகம் செய்தார். சீகன்பால்கு அவரிடம் இருந்த கிறிஸ்தவத்தின் பற்றுருதியைக் கண்டு அவரைத் தரங்கம்பாடிக்கு கூட்டிச் சென்று அவருக்கு வேதத்தில் உள்ள ஆழ்ந்த சத்தியங்களை தெரியப்படுத்தினார். இதைக்கண்ட ஆறுமுகத்தின் தந்தை அவரை வீட்டைவிட்டு துரத்திவிட்டார். ஆனால் அவருடைய தாயார் மட்டும் அவரை அடிக்கடி சென்று பார்த்துவருவார். சீகன்பால்கு நாட்டுக்கு முதன்முதலில் அர்ப்பணித்த, 'காகித ஆலை', 'அச்சு இயந்திரம்', 'பெண்களுக்கான கல்விகூடம்', 'தொழிற்கல்வி', 'மதிய உணவு', 'இறையியல் பாடசாலை', 'தமிழ் அகராதி', 'வேதாகமம் மொழிபெயர்த்தல்' 'பல மதத்தினரோடு உரையாடல்' போன்றவற்றில் ஆரோனை தன்னுடைய சக ஊழியராக நியமித்துக்கொண்டார்.

**ஆரோன் குருவாக அபிஷேகம் பெற்ற தினம்:-**

ஆரோன் அவர்கள் சீகன்பால்கு முதன்முதலில் ஆரம்பித்த இறையியல் பாடசாலையில் (1716) முதல் மாணவராக சேர்ந்து, பயின்றார். மக்கள் அனைவரும் தமக்கு ஒரு ஆயர் வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். ஏனென்றால் அவர்களுக்கென்று சொந்த நாட்டை சேர்ந்த ஒரு போதகர் இருந்தால், அவரிடம் தைரியமாகவும், உரிமையாகவும் அணுகலாம் என்று அவர்கள் நினைத்தனர். இதன் அடிப்படையாக மிஷனரிமார்களும் இங்கிலாந்து, ஜெர்மனி, டென்மார்க் போன்ற நாடுகளில் உள்ள தலைவர்களிடம் இதைக்குறித்து ஆலோசித்து, முடிவாக SPCKன் தலைவர் 'ஆர்ச் பிஷப் ஆஃப் காண்டர்பரி' 'வில்லியம் பிளேக்கிடமிருந்தும்' (1729) 'நான்காம் பிரடெரிக்' (King of Denmark & Norway) ஒப்புதல் கடிதங்களைப் பெற்று நடவடிக்கையில் இறங்கினர்.

அவர்கள் மூவரை (சவரிமுத்து, ஆரோன், சந்தியாகு) தேர்ந்தெடுத்து போட்டிக்காக தயார்படுத்தினர். சவரிமுத்து தன் வயது மூப்பின் காரணமாக மறுத்துவிட்டார். இப்பொழுது ஆரோனும் சந்தியாகும் கர்த்தருடைய சேவை செய்ய காத்திருந்தனர். 1733ம் ஆண்டு மே மாதம் 27ம் தேதி அனைவரும் 'பெந்தெகொஸ்தே' திருநாளை கொண்டாட வந்திருக்கும் போழுது அவர்களிடம் தேர்ந்தெடுக்கும் முறையை (ஓட்டுகள் மூலம்) மிஷனரிகள் தெரிவித்தனர். போட்டி தொடங்கியது. ஆரோனுக்கு ரோமர் 8.14-16 சந்தியாகுவுக்கு 1 கொரி. 3.16 பிரசங்கம் செய்ய கொடுக்கப்பட்டது. இருவரும் பிரசங்கித்தனர். சபையாரிடமிருந்து சமமாக ஓட்டுக்கு இருவருக்கும் கிடைத்தது. ஆக திரும்பவும் மிஷனரிமார்களும் சபை மக்களும் அக்டோபர் 2ம் தேதி கூடி முடிவாக ஆரோனை தேர்ந்தெடுத்தனர் மற்றும் டென்மார்க் அரசருக்கும் 'ஆர்ச் பிஷப் ஆஃப் காண்டர்பரி'க்கும் தெரிவிக்கப்பட்டது. ஆரோன் பன்முக ஆற்றல் கொண்டவராகவும், கிராமபுற மக்களிடத்தில் சிறந்த விதத்தில் அறிமுகமானவராக இருந்ததினாலும் பல வகையில் தனித்தன்மையுடன் கடவுளின் செய்தியை கூறினதினாலும் அவரை டேனிஷ் குருமார்கள் தலையில் கை வைத்து அவரை அபிஷேகம் செய்தார்கள்.

**ஆரோனின் சமுதாய பங்களிப்புகள்:-**

நம்முடைய தமிழ் மொழிக்காகவும், கலாச்சாரத்திற்காகவும், மக்களுக்காகவும் அவர் ஆற்றிய பங்கு மகத்தானது. மொழிப்பெயர்த்தலின் மூலமாகவும் எழுத்தினாலும், நம்முடைய கலாச்சாரத்தையும் இலக்கியத்தையும் இன்னும் அநேக காரியங்களை ஐரோப்பியர்களுக்கு தெரியப்படுத்தினார். மிகவும் கீழ்த்தட்டில் உள்ள மக்களின் உரிமைக்காக போராடி அவர்களை மேம்படுத்துவதின் மூலம் முன்மாதிரியாக திகழ்ந்தார். சொந்த மண்ணின் ஆயர் என்பதால் மக்கள் தைரியமாக அவரிடம் தங்களுடைய பிரச்சனைகளைக்கூறி, அதனைத் தீர்த்துக் கொண்டார்கள். இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர்களின் சில சச்சரவுகளையும் அவர் மேன்மை பொருந்திய தீர்வுகளால் அதனை நிறைவேற்றுபவராக திகழ்ந்தார். ஐரோப்பியர்களுக்கும் தமிழர்களுக்கும் அவர் ஒரு பாலமாக அமைந்து தன்னுடைய பனை ஓலை பிரதிகள் (Palm leaves manuscripts) மூலம் இங்கிலாந்து, ஜெர்மனி, டென்மார்க் அறிவுசார் மேதைகளிடம் தம்மை தொடர்புபடுத்திகொண்டார். மேதைகளிடத்தில் மட்டுமில்லாமல், அரசியல் மற்றும் வணிகர்களிடமும், பாமர மக்களிடமும் பரஸ்பர கற்றல் மூலமாக உணர்ந்து கொள்ளும்படி செய்தார்.

இந்த இணைப்பில், ஆரோனின் 8வது நேரடி வாரிசாகிய நான் (ஆரோன் தங்கராஜ் சாமுவேல்) பல ஆய்வு கட்டுரைகள், ஆவணங்கள், தொடர்புடைய பதிவுகள் மற்றும் உலகம் முழுக்க பரிந்துரை கடிதங்கள் குறிப்பாக பல பேராயர்கள், உலகசபை பல்கலைக்கழகங்கள், ஆராய்ச்சி நிறுவனங்கள், கல்லூரிகள், பல்வேறு சபைகளிடமிருந்து பெற்று குறிப்பாக 'Lutheran world federation & World Council of Churches' (Geneva), Archbishop of Canterbury 'Rt.Rev. Rowan Williams NewYark city, Bishop Allan Rimbo, Dr.Reginald Brantley, (Former Judge) family court, NYC) மேலும் பல்வேறு தலைவர்களிடமும், அரசியல் பிரமுகர்களிடமும் பெற்று மத்திய அரசுக்கு ஆரோனுக்கு ஒரு தபால்தலை வெளியிட கோரிக்கை வைத்தேன். அப்பொழுது எல்லா முன்னனி செய்திதாள்களிலும் வெளிவந்தது. இந்திய பிரதம மந்திரி திரு. மன்மோகன் சிங் அலுவலகத்தில் இருந்த அப்போதைய அமைச்சர் திரு. நாராயணசாமி அவர்களிடமிருந்து வந்தது. இந்திய தபால்துறையின் நிகழ்ச்சி நிரலில் (Agenda) வெளிவந்தது. இதன்மூலமாக தான் கோயம்புத்தூரில் நடந்த **'தமிழ் செம்மொழி மாநாட்டிற்கு'** பார்வையாளராக அழைக்கப்பட்டிருந்தேன்.

2017ம் ஆண்டு உலகம் முழுவதும், மார்ட்டின் லூத்தரின் 500வது சீர்த்திருத்தலின் ஆண்டாக கொண்டாடினார்கள். அதில் இங்கிலாந்து, ஜெர்மனி, டென்மார்க், சுவீடன், அமெரிக்கா போன்ற நாடுகள் அதை கோலாகலமாக கொண்டாடிற்று. NewYarkல் உள்ள Columbia University எங்கள் குடும்பத்தை அழைத்து ஆரோனின் 8வது வாரிசாக எங்களை பெருமைபடுத்தினர். அதில் Rev. Prof. Dr. Daniel Jeyaraj (Liverpool University) U.K) அவர்கள் ஆரோனின் ஆய்வுக்கட்டுரையைப் பற்றி உரையாற்றினார். 2018ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ம் தேதி ஆரோனின் 300ம் ஆண்டு ஞானஸ்நானத்தை முன்னிட்டு, சீகன்பால்கு நிறுவின முதலாம் இறையியல் பாடசாலையில் (தரங்கம்பாடி) நினைவுக்கல்லை பதித்தனர். இப்பொழுதும் 'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின்' **'கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்'** மாத ஆய்விதழுக்கு நன்றி தெரிவித்து கொண்டு இந்த கட்டுரையை சமர்பிக்கிறேன்.



***Aaron Thangaraj Samuel.***
**8th Direct Descendant,**
**NewYork (USA).**

# விடுதலை தேவாலயத்தின் முதல் இந்திய போதகர் அருள்திரு.ராஜகோபால்

Nivedita Louis,
Historian and Author

## (Free Church of Scotland-1846)

கல்வித் தந்தை என்ற பெயருக்கு உண்மையில் தகுதியான நபராக நான் கருதுபவர் இவர். பூந்தமல்லி ராஜகோபால். ஆங்கிலேயரின் உச்சரிப்பில் P. Rajahgopaul! ஜான் ஆண்டர்சன் (மதராஸ் கிறிஸ்துவ கல்லூரியை தொடங்கியவர்) ஸ்காட்லாந்து மிஷன் பணியை 1837ஆம் ஆண்டு கறுப்பர் நகரத்தில் தொடங்கினார். ஆண்டர்சனிடம் தஞ்சமடைந்து முதன் முதலாய் மதம் மாறுவதாக வேண்டுகோள் வைத்தது சிறுவன் ராஜகோபால் தான். அவனும், நண்பன் வெங்கடராமையா மற்றும் எத்திராஜுலு ஆகிய மூவருக்கும் ஜுன் 20, 1839 அன்று திருமுழுக்கு அளித்தார் ஜான் ஆண்டர்சன்.

பெற்றோர் விடவில்லை, நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர். சிறுவர்களைக் கட்டாயப்படுத்தி ஆண்டர்சன் கிறிஸ்துவ மதத்திற்கு அவர்களை மாற்றிவிட்டார் என்பது குற்றச்சாட்டு. அசராத ராஜகோபால், நீதிமன்றத்தில் சுய விருப்புடன் தானே மதம் மாறியதாக சாட்சி சொல்ல, குடும்பம் அவரைத் தலைமுழுகியது! தளராத ராஜகோபால், ஆண்டர்சனிடம் கல்வி கற்றார். 1846ஆம் ஆண்டு மிஷனரியாக, விடுதலை தேவாலயத்தின் முதல் இந்திய பாஸ்டராக பணியேற்றார். ஆண்டர்சன் நோய் வாய்ப்பட்டு கிடந்த போது, அவரை அள்ளிக் கொண்டு லண்டன் சென்று, உடல் நலம் பேணி மீட்டுக் கொண்டுவந்தார் ராஜகோபால்.

1870ஆம் ஆண்டு கறுப்பர் நகரத்தின் சேரியில் தலித் மாணவர்களுக்காக ராஜகோபால் ஏழைகள் பள்ளி ஒன்றைத் தொடங்கி நடத்தினார். 1877ஆம் ஆண்டு மே மாதம் ராயபுரம் பகுதியில் பெண்கள் பள்ளி ஒன்றைத் தொடங்கினார். தம்பு செட்டித் தெருவில் ஒரு பள்ளியும், மின்ட் தெருவில் ஒரு பள்ளியும் தொடங்கினார். 1900ஆம் ஆண்டு தலித் பள்ளியை மூடிவிட்டு, அதன் மாணவர்களை ராயபுரம் பள்ளியில் இணைத்துக் கொண்டார். 1877ஆம் ஆண்டு அப்படி தொடங்கப்பட்ட பள்ளி தான் இன்றைய ராயபுரம் கிழக்கு கல்மண்டபம் பகுதியில் உள்ள சி.எஸ்.ஐ. ராஜகோபால் மேல்நிலைப் பள்ளி. மின்ட் பகுதியின் 5, கொண்டல் தெருவில் ராஜகோபால் நடுநிலைப் பள்ளி இன்றும் இயங்கி வருகிறது. அவர் தொடங்கிய ஆண்டர்சன் ராஜகோபால் பெண்கள் மேல்நிலைப் பள்ளி இன்றும் தம்புசெட்டி தெருவில் இயங்குகிறது.

அவர் சார்ந்திருந்த இந்து மதம், அதில் புரையோடிப் போயிருந்த சாதி இரண்டையும் அவரால் தொடர்ந்து கவனித்து சரியான கேள்விகளை எழுப்ப முடிந்தது. சாதி எப்படி மனிதனைத் துண்டாடிக் கொண்டிருந்தது என்பதை நவம்பர் 27, 1845 அன்று ஆற்றிய உரையில் தெளிவாகவே விளக்கியிருக்கிறார் ராஜகோபால்.

**"சாதி பற்றிய ஐந்து கேள்விகளும், ராஜகோபாலின் பதில்களும்"** என்ற பெயரில் 1847ஆம் ஆண்டே அச்சேறியிருக்கின்றது அவரது சாட்டையடி கருத்துகள். அரைகுறை அறிவுடன் ஏனோதானோ என்று இல்லை அவர் தரும் விளக்கங்கள். தெளிவாக அலசி ஆராய்ந்து, மதமும் சாதியும் ஒன்றிணைந்து தீண்டாமை என்ற அவலத்தை மக்கள் தூக்கிப் பிடிக்க ஏன் காரணிகள் ஆகின்றன என்று பதில் தருகிறார்.

அந்த ஐந்து கேள்விகள் இதோ :-

1) சாதி இந்து மதத்துடன் தொடர்புடையதா?

2) தீண்டாமையும் சாதிய அமைப்பும் பின்னிப்பிணைந்தவை என்ற எண்ணத்தை மக்கள் மனதிலிருந்து விரட்ட முடியுமா?

3) நம் நேட்டிவ் ஃப்ரீ சர்ச் மக்கள் சாதியை எப்படிப் பார்க்கிறார்கள்?

4) தீண்டாமை, சாதியம் இரண்டும் இந்துக்கள் மனதில் இணைபிரியாமல் இருக்கின்றனவா?

5) சாதியும் ஐரோப்பிய சமூகத்தின் வர்க்க முறையும் ஒன்றா?

இந்த ஐந்து கேள்விகளின் பதில்கள் ஒவ்வொன்றும் கிறிஸ்துவ நம்பிக்கையின் அச்சாணி; ஆணிவேர். அதில் மூன்றாவது கேள்விக்கான பதிலை மட்டும் இங்கே விரிவாக மொழியாக்கம் செய்து தரப்பட்டுள்ளது. மூல நூலை இங்கே வாசிக்கலாம்: https://www.google.co.in/books/edition/Caste-in-Its-Religious-and-Civil-Charact/YAZNAQAAMAAJ?hl=en&gbpv=1&kptab=overview

"இந்து மத சாஸ்திரங்கள் சாதியை இந்து மதத்தின் இன்றியமையாத பகுதியாகவே நிலைநிறுத்துகின்றன." சிலை வழிபாடு செய்யும் இஸ்ராயேல் மக்களை கடவுள் எவ்வாறு வெறுக்கிறார் என்பதை நாம் கண்டிருக்கிறோம். இந்து சிலை வழிபாட்டின் மீதான நம் கருத்தும் அதுவாகத்தான் இருக்க முடியும். தன் சொந்த மக்களான யூத மக்கள் மீதே சிலை வழிபாட்டை நடத்திய காரணத்துக்காக கடவுள் கொண்ட சினத்தைக் குறித்தும் அறிந்திருக்கிறோம். இந்த சிலை வழிபாட்டின் நீட்சியாக தொடரும் சாதியத்தையும் கிறிஸ்துவர்களான நாம் ஒதுக்க வேண்டியுள்ளது. 1841ஆம் ஆண்டு ஜுன் மாதம் திருமுழுக்கு பெற்ற போதே சாதியத்தை நான் அறவே என் மனதிலிருந்து அழித்துவிட்டேன்.

கிறிஸ்துவத்தின் உணர்வு, நீதி, விதிமுறைகளுக்கு எதிரானதாகவே நான் சாதிய அமைப்பைக் காண்கிறேன். சாதி உண்மை, கடவுளால் அமைக்கப்பட்டது என்பதை ஏற்க வேண்டும் அல்லது கிறிஸ்துவத்தை ஏற்கவேண்டும். சாதியை ஏற்றுக்கொண்டால் அங்கே கிறிஸ்துவம் விழுந்துவிடுகிறது. கடவுள் மனிதர் அனைவரையும் ஒன்றாகவே பார்க்கிறார்; அவருக்கு சாதி பேதம் கிடையாது. மனிதரில் ஒருவர் தூய்மையானவர்; மற்றவர் அழுக்கானவர் என்ற வேறுபாடு கடவுள் பார்ப்பதில்லை. பாவிகளை மன்னிக்கும் கடவுள்- "எல்லா மனிதர்களின் ஆத்துமத்துக்கும் மீட்பு தேவையாய் இருக்கிறது; எல்லா உத்தமரும் ஒன்றே; எல்லா பாவிகளும் ஒன்றே" என்ற கோட்பாட்டில் இயங்குபவர்.

கடவுளின் சொற்படி, ''ஒரே ரத்தம் கொண்ட மனிதர் அனைவரும் வசிக்கும்படியாக கடவுள் நாடுகளையும் உலகையும் படைத்தார்'' என்றே நாம் அறிகிறோம். அதனால் கடவுள் முன் நாம் அனைவரும் சமம். ''நம் அனைவரையும் கடவுள் தானே படைத்தார்? நம் அனைவரின் தந்தையும் கடவுள் அல்லவா?''

பாவம் செய்த மனிதன் யாராக இருப்பினும் அவன் கடவுளை விட்டு நீங்கி தொலைவில் சென்றுவிடுகிறான், அவன் யாராக இருப்பினும். கடவுளை நீங்கி செல்பவன் ஒவ்வொருவனும் பாவி தான். தாவீது தன்னைக் குறித்து பேசியது யூத நாட்டை ஒட்டுமொத்தமாகக் குறிக்கிறது; அதுவே முழு உலகையும் குறிக்கிறது. ''நான் பாவத்திலிருந்தே பிறந்தேன்; என் தாயின் பாவத்தால் நான் பிறந்தேன்'', என்று தாவீது சொன்னது உண்மை. கடவுளிடமிருந்து பாவம் செய்து விலகும் எல்லோரும் ஒன்றே. ''நாம் எல்லோரும் பாவம் செய்திருக்கிறோம்; கடவுளின் மாட்சிக்கு தகுதியற்றவராகவே இருக்கிறோம்''. கடவுளின் முன் நாம் அனைவரும் ஒன்றே. புதிய வேதாகமம் இதையே சொல்கிறது- ''இயேசு கிறிஸ்துவின் முன்னிலையில் விருத்தசேதனம் செய்வது; செய்யாமலிருப்பது என இரண்டுமே பொருட்டல்ல. அன்பினால் வரும் நம்பிக்கை மட்டுமே முக்கியம்''. ''கிரேக்கரோ, யூதரோ, விருத்தசேதனம் செய்தவரோ, செய்யாதவரோ, கொள்ளைக்காரனோ, சிதியனோ, கட்டுண்டவனோ, விடுதலையடைந்தவனோ, கிறிஸ்துவே எல்லோரும், அவர்கள் ஒவ்வொருவரிலும் கிறிஸ்துவே இருக்கிறார்.''

கிறிஸ்துவத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் கிறிஸ்துவை பின்பற்றுபவர்களாக இருப்பதால் ஒருவரை விட மற்றவர் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேற்றுமை எண்ணத்தைக் கைவிடவேண்டும். இங்குள்ள அனைவருக்கும் தலைவர் ஒருவரே, அவர் கிறிஸ்துவே. அவரின் கீழ் நாம் அனைவரும் ஒன்றே.

கிறிஸ்துவும் அவர் சீடர்களும் வாழ்ந்து காட்டிய வாழ்வியல் நெறிக்கு சாதி எதிரானது. கிறிஸ்து தன் சீடர்களுடன் ஒன்றாகவே அமர்ந்து உண்டார்; எல்லோருடனும் நட்பு பாராட்டினார் கிறிஸ்து. பரிசேயரின் வீட்டில், பாவிகளின் வீட்டில், பொது ஜனத்தின் வீட்டில் என யார் அழைத்தாலும் அவர்களுடன் ஒன்றாகவே அமர்ந்து விருந்தாடினார். சீமோனின் வீட்டு கறி விருந்தில் தன் பாதங்களை நறுமணத் தைலம் கொண்டு பாவம் செய்து மனம் திரும்பிய பெண் கழுவித் துடைக்க அனுமதித்தார். கிறிஸ்து சாதி பார்க்கவில்லை; எல்லோரையும் சமமாகவே நடத்தினார். எல்லோருக்கும் ஒரே மீட்பை அளித்தார். எல்லோருக்கும் ஒரே போதனையை வழங்கினார். கலிலேயர், மீனவர், யூதர், பொது நிலையினர் என்று எளிய மக்களிடமிருந்தே தன் சீடர்களைத் தேர்ந்தெடுத்தார். யூத மக்களிடையே மத குருக்களையும், பாவிகளையும் ஒன்றாகவே பார்த்தார்; அவர்களுடன் வீடுகளில் அமர்ந்து ரொட்டியைப் பகிர்ந்து உண்டார். பவுலின் உதாரணம் ஒன்றே கிறிஸ்துவின் சமநிலையை உணர்த்துவதாக இருக்கிறது. பரிசேயரான பவுல் கிறிஸ்துவத்தைத் தழுவி கிறிஸ்துவைப் பின்செல்லும் வரை கட்டுக்கோப்பான மத முறைகளை பின்பற்றிவந்தார். ஆனால் அதன் பின் அனைவருடனும் நட்பு பாராட்டவும், பழகிடவும் செய்தார். தத்துவங்கள் பேசிய ஏதன்ஸ் நகர மக்களோ, செல்வச் செழிப்பில் மிதந்த கொரிந்தியர்களோ, ஃபிலமோன் என்ற தலைவனோ, ஒசிமஸ் என்ற அடிமையோ, எல்லோரையும் சமமாகவே நடத்தினார் பவுல்.

கிறிஸ்துவத்துக்குள் வருபவர்கள் அனைவரையும் கடவுளின் மகன்களாகவே பார்த்தார்கள் என்பதும், அனைவரும் சமம் என்பதும் விளங்குகிறது. சகோதரத்துவம் மற்றும் நட்புக்கு எதிராகவே சாதியம் இருக்கிறது. ஆரம்ப கால கிறிஸ்துவர்கள் மத்தியில் இந்த சகோதரத்துவம் ஓங்கியிருந்தது. ஒருவருக்கு ஒருவர் துணை நின்றார்கள். எருசலேம் ஆலயத்துக்கு சிக்கல் வந்தபோது பிலிப்பி மற்றும் பிற தேவாலயங்கள் உடனடியாக உதவியனுப்பின. ஆசியாவுக்கு மீட்பைக் கொணர பவுல் வந்தபோது அவருடன் சொபாதர், அரிஸ்தார்கசு, செகண்டசு, டிரொபிமசு போன்ற புதிதாக மதம் மாறிய அநேகர் உடன் வந்தார்கள். ஆதி கிறிஸ்துவர்கள் தங்களுக்குள் எந்தப் பிரிவும் கொள்ளவில்லை, ஒருவருக்கொருவர் நெருங்கிய நட்பு பாராட்டியே வந்தார்கள். தன்னில் கீழ் நிலையில் பிறந்து வாழும் ஒருவனிடம் நாம் அன்பு காட்டினால் கடவுளின் ஒளியும் அன்பும் நம் மேல் இருக்கும் என்பதில் ஐயமில்லை. உண்மையான கிறிஸ்துவ அன்பு மனிதனை இவ்வுலகில் உயர்த்தும். இந்த மட்டற்ற சக உயிர்கள் மீதான அன்பே செவ்விந்தியர்களிடம் நட்பு பாராட்டிய பிரெயினர்டிடம் இருந்தது. கால் நீட்டிக்கொள்ள கோரைப்புல் வேய்ந்த குடில் ஒன்று மட்டுமே தனதாக்கிக் கொண்டு அவர்களுடன் அன்பைப் பகிர்ந்து வந்தார் பிரெயினர்ட். இது தான் மிஷனரிகளின் அன்பு. பிற உயிர்களிடத்தில் அளவற்ற அன்பு பாராட்டவும், அவர்களின் ஆத்துமாக்களுக்கு மீட்பு பெற்றுத் தரவுமே மிஷனரிகள் முயல்கிறார்கள். அப்படி இருக்க, தன்னில் ஒருவனாக, தன்னோடு வாழும் ஒருவனுடன் கைகோத்துக் கொள்ளாமல், சாதி பேதம் பார்க்க எப்படி இங்குள்ள கிறிஸ்துவர்களால் முடிகிறது?

சாதியை இறுகப் பற்றியிருக்கும் கிறிஸ்துவனால் ஒரு போதும் பிறருக்கு மீட்பைக் கொண்டுவரமுடியாது. தன்னை விட தாழ்த்தப்பட்டவனின், பறையரின் வீடுகளுக்குள் அவர்கள் நுழைய முடியாது; அவர்களுடன் சரிசமமாகப் பழக முடியாது; அவர்களுக்கு கர்த்தரின் வார்த்தையைக் கொண்டுசெல்ல முடியாது. இப்படி இருக்கையில் நான் எப்படி சாதியத்தை மதிக்க முடியும்? தூக்கிப்பிடிக்க முடியும்? என் திருமுழுக்கின் போதே நான் சிலை வழிபாட்டுடன் இந்த சாதியத்தையும் தொலைத்துவிட்டே வந்திருக்கிறேன். ''

கிட்டத்தட்ட 170 ஆண்டுகளுக்கு முன்னர் தெளிந்த மனதுடன் முதன்முதலில் கிறிஸ்துவ மதத்தைத் தழுவிய ராஜகோபாலின் பதில்களை இன்றைய சூழலில் பொருத்திப் பாருங்கள். உங்கள் அருகே அமர்ந்து ராஜகோபால் சாதியை விட்டொழித்து கிறிஸ்துவத்தைக் காப்பாற்றுங்கள் என்று சொல்வது போலத் தோன்றவில்லையா? இரண்டு நூற்றாண்டுகள் கழிந்த பின்னும் அதே இடத்தில் நாம் நிற்க வெட்கப்பட வேண்டும்; 200 ஆண்டுகளுக்குப் பின்பும் ஒவ்வொரு சொல்லும் மெய்யானதாக, நாம் கவனத்தில் கொண்டு கடைப்பிடிக்க வேண்டியதாகச் சொன்ன ராஜகோபால் எவ்வளவு முன்னோக்கி சிந்தித்து இவற்றைச் சொல்லியிருக்க வேண்டும்? இத்தகைய தெளிவு இருந்த மனிதன் தொடங்கிய பள்ளியில் படித்ததற்கும், பணியாற்றியதற்கும், ஏன், அந்த இடத்தில் கால் பதிக்கவே நாம் கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக கட்டாயம் இருக்கவேண்டும் அல்லவா?

# ‘வரலாற்று சுவடுகள்’ நீ வரலாற்றில் நிலைத்திருவாய் !



(‘கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்’ ஓராண்டு நிறைவெய்துவதை முன்னிட்டு வழங்கப்படும் வாழ்த்துப் பூ(பா)க்கூடை)

ஏறி வந்த ஏணியினை எட்டி
உதைப்போரும்
வாழ்வளித்த வள்ளல்களை வசைபாடும்
புல்லர்களும்
நாட்டில் பெருகிவரும் நலங்கெட்ட நாட்களில்
-நம்
நாட்டைப் பல்துறையில் நாளும்
உயர்த்திடவே,
கல்வியொளி பாய்ச்சி கண்திறந்து
வைப்பதற்கு
மூலைமுடுக்கெல்லாம் கல்விக்
கூடங்கள் திறந்து வைத்தும்
கொத்துக் கொத்தாய்ப் பன்னூறு
கொள்ளை நோய்கள் தாக்க
சத்தான மருந்துகளோ சரியான
போஷாக்கோ
சற்றேனும் இல்லாமல் சாவுப் படுகுழியில்
மாண்டுவந்த மானிடர்க்கு
மறுபிறப்பு தரும்வண்ணம் - கோடி
மருத்துவ மனைகளைத் தொண்டுக்
கூடங்களாய் நிறுவி வைத்தும்
கண்ணிழந்தோர், காதுகேளார் என
எண்ணிறந்த துயருறுவோர் -
ஆதரிக்க யாருமின்றி ஏதிலிகளாய்ப்போன
ஏழைமக்கள், சிறைமீண்டோர்
எனப்பெருகும் எல்லார்க்கும்
மறுவாழ்வு இல்லங்கள் நாடெங்கும்
கட்டிவைத்தும்
சாதிப்பேயின் சதிராட்டக் கொடுமையிலே
அறிவுத்தெளிவற்ற ஆட்சியாளர்
துணையோடு
ஆணவ ஆட்டம் போட்டு
அப்பாவி மக்கள் திரளை
கீழ்ச்சாதி முத்திரை குத்தி
அடிமைத் தனத்தின் ஆழ்ந்த பெரும்
பள்ளத்துள்
அமிழ்த்திவிட்ட மேல்சாதி அக்கிரமங்கள்
தொலைய
முன்னேற்ற வாசல்கள் பன்னூறு திறந்து
விட்டு,
உளையான படுகுழியில் உழன்றவரைக்
கைதூக்கி
கன்மலையின் மேல் நிறுத்தி
புதுவாழ்வு தந்த பொன்னான சேவையோடு,
நிலையில்லா இவ்வாழ்வில்
எத்தனைதான் சுகம்பெற்றும்
கலைந்திடுமே ஓர்நாளில்
இக்கனவு என்பதனால்
நிலையான வாழ்வளிக்கும்
நித்தியராம் இயேசுபிரான்
நற்செய்தி அமுதத்தை நாளும் அவர்க்கூட்டி
இம்மைக்கும் மறுமைக்கும்
இனிமையினை வாழ்வாக்கி
செம்மைமிகும் கொடையளிக்க
செந்தமிழர் நாட்டுக்கு
ஆயிரமாயிரம் மைல்கடந்து
அலைகடலைத் தாண்டிவந்து
ஆவிபொருள் உடல் அனைத்தும்
அர்ப்பணித்து வாழ்ந்திட்ட
அருளாளர் சேவைகளின்
அற்புத வரலாறுகளை,
அடுக்கடுக்காய் ஆதாரம்
ஆயிரமாய் அள்ளிவைத்து
ஆவணப்படுத்தி, அரிய நல்அறிவுப்
பெட்டகமாய்
நாட்டுக்களிப்பதற்கு நல்லாயன் அருளாலே
இறையடியார் சிலரின் - அதுவும் சில
இளைஞர்களின் தியாகமுள்ள
இறைத்தரிசனத்தின் இனிய விளைவாக
உதித்தெழுந்த ‘கிறிஸ்தவ வரலாற்று
சுவடுகள்’ எனும்
வைரமணிப் பெட்டகமே !
வள்ளல் இயேசு புகழ்ச்சிமிழே - உன்
தளராத அரும்பணியில் -
தடையில்லா பயணத்தில்
ஓராண்டு நிறைவெய்தி ஒளிமுகம்
காட்டுகின்றாய்
எனும் உண்மை, இறையன்பர்
இதயத்தில் தேனாய்த் தித்திக்கும்
அருமருந்தாய்
நிறைகிறது ! நெஞ்சமெல்லாம்
நெகிழ்கிறது ! மகிழ்கிறது !
கரம்பிடித்து நடத்தி வந்த
கர்த்தர் பதம் பணிந்து,
சிரமேற்றோம் அவர்பணியை - இனி
சிந்தை தளரோம் - கோடி
இடர்வந்து சூழ்ந்தாலும்
இன்னல்கள் தாக்கிடினும் - என
அருட் சபதம் ஏற்கின்ற
அற்புதத் தருணமிதில்
வாழ்த்துகிறேன் செபத்தோடு !
வளர்ந்து பெருகட்டும் - இத்
தரிசன திருப்பணி ! - இதனாலே
மலர்ந்து செழிக்கட்டும் - பல
புதிய திருப்பங்கள் ! புரட்சிப் பார்வைகள் !
திருச்சபையின் வரலாறும்
திருச்சபையைக் கட்டியெழுப்பிய
திருத்தொண்டர் தியாக வரலாறும்
திருச்சபையின் உள்ளுறையும்
தொண்டர் நாம் திருத்தமாய் முதலுணர்ந்து,
ஊருக்கும் உலகுக்கும் பின்
அச்சமின்றிப் பறைசாற்ற
உதவட்டும் இந்த ஆய்விதழ் படைப்புகள் !
இதழ்ப்பணியும் தொடர்புடைய
பிறபணிகள் எல்லாமும்
தொய்வின்றி இயேசு பிரான்
மறுவருகை வரைக்கும் இங்கே
தொடர்வதற்குத் தேவையான
அருள்வளமும் பொருள்வளமும் - பிற
ஆதார வளங்களையும்
வற்றாத ஆசீர் வாத ஊற்றான நம்மீட்பர்
வாரிவாரி வழங்கட்டும் எனவேண்டி,
இப்பணியில் தமைக்கரைக்கும்
இனியவர்கள் எல்லார்க்கும்
தலை வணங்கி, நன்றி சொல்லி, சிறியேன்
எனக்கும் இதில் பங்களித்த
‘வரலாற்று சுவடுகள் குழுவின்’ பாசத்தை
நினைந்துருகி,
வாழ்த்தி மகிழ்கின்றேன் வண்டமிழ்க்
கவியாலே !!

**(கவிஞர் முனைவர் மோ. மைக்கேல் பாரடே)**

# அருள்திரு பால் ரங்க ராமானுஜம்

அருள்திரு தே. இராஜதுரை
CSI Trichy, Tanjaur Diocese

**வா**ன்பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியின் கிளை நதிகளில் ஒன்றாகிய பாமணி ஆற்றின் கரையில் அமைந்து பல்லாற்றானும் சிறப்புற விளக்கும் மன்னார்குடி வரலாற்று முக்கியத்தவம் வாய்ந்தது. **'மன்னை மதியழகு'** என்று போற்றப்படும் அழகிய மதில்களையும் சுமார் 500 ஆண்டுகள் பழமையான நாயக்க மன்னர்களால் கட்டப்பட்ட ஹீ ராஜகோபால ஸ்வாதி திருக்கோயலும் ஹரித்ராந்தி என்ற பெயரில் பெரியகுளமும் தமிழகமெங்கும் அறியக்கிடப்பது. மன்னன் பெருநகரில் கோயிலுக்கு எதிரில் உள்ள தெருவில் 1892இல் ஸ்வாதி பிராமண குடும்பத்தில் பிறந்தவர் ரங்கராமானுஜம். 7வயதில் பூநூல் அணிந்தவர். ஒரு பிராமண கிறிஸ்தவராவது என்பது நினைத்துப்பார்க்க இயலாதது. அத்தகைய கட்டுப்பாட்டில் அந்நகரம் இருந்தது.

**ஆரம்பக்கல்வியும் கிறிஸ்தவ ஈர்ப்பும்**

மன்னையில் வெஸ்லியன் மிஷன் 1834இல் தனது அரும்பணியை கல்விப்பணி மூலம் ஆரம்பித்தது. ராஜ வீதியில் உள்ள 'வெஸ்டன் பள்ளி' அநேகருடைய வாழ்க்கையில் கிறிஸ்தவ தாக்கத்தை ஏற்படுத்தியது. இப்பள்ளியில் பயின்ற ரங்கராமானுஜத்தையும் விட்டுவைக்கவில்லை. தன் முதல் கிறிஸ்தவ அனுபவம் இப்பள்ளியில் பயின்றபோது ஏற்பட்டது என்று குறிப்பிடுகின்றார். 1906 இல் பின்லே கல்லூரியில் சேர்ந்தார். கோபுராலயம் குளக்கரையில் சந்தித்து அவரால் ஈர்க்கப்பட்ட அருள்திரு. ஜேம்ஸ், எல்லிஸ் பின்லே கல்லூரியின் துணை முதல்வராக இருந்தார்.

**செய்தியை எடுத்துச்செல் ஐக்கியம்**

பின் இதே கல்லூரியில் பயின்ற பல மாணவர்கள் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறவர்களாக விரும்பினர். அவர்கள் 'இரகசியமாக சந்தித்து செய்தியை எடுத்துச் செல் ஐக்கியத்தில்' இணைந்து ஜெபித்து வந்தார்கள். அருள்திரு எல்லிஸ் அவர்கள் திருமறையைக் கற்பித்து, அவர்களை செம்மையான பாதையில் நடத்தினார். பள்ளிவகுப்பில் படித்தவர்கள் இந்த ஐக்கியத்தில் இணைந்திருந்தனர். 18வயதுக்கு மேற்பட்டவர்கள் மட்டுமே இவ்வைக்கியத்தில் சேர்க்கப்பட்டனர். 18வயது நிரம்பாத ரங்கராமானுஜம் அவர்களைத் தொடர்ந்து தானும் இயேசு கிறிஸ்துவின் சீடராக விரும்பினார். அவர் இகசியக்கூடுகையின் வெளியே நின்று கவனித்தார். தன்னை ஆண்டவருக்கென்று அர்ப்பணித்தார். இவர் திருமுழுக்குப் பெற்றதாக வதந்தி பரவியதால் ரங்கராமானுஜத்தின் பெற்றோர்கள் அச்சுறுத்தினார். வீட்டுச்சிறையில் இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டது.

1909-ஆம் ஆண்டு கிறிஸ்து பிறப்பு நாளில் இவரும், கிருஷ்ணசாமி என்பவரும் ரயில் ஏறி சென்னை சென்றனர். இரு ஐயங்கார் மாணவர்கள் தலைமறைவானது மன்னை பிராமணர்களுக்கு பெருங்கோபத்தை உண்டாக்கியது. இருநாட்களுக்குப்பிறகு இராஜகோயில் ஸ்வாமி ஆலயத்தில் கூடிய காவலர்கள், நீதிபதிகள், வழக்குரைஞர்கள் அனைவரும் இணைந்து கிறிஸ்தவர்களையும் அருட்பணியாளர்களையும் கண்டனம் செய்தனர். அன்றிரவு மன்னை கிறிஸ்தவ ஆலயத்தை தீவைத்துக்கொழுத்தினர். இந்து பத்திரிக்கை கிறிஸ்தவர்களுக்கும் பிராமணர்களுக்கும் ஏற்பட்ட பிரச்சனை என்று செய்தி வெளியிட்டது. சில நாட்களில் இருமாணவர்களும் பிடிபட்டனர். 10 வாரங்கள் இருவரும் பல்வேறு வகையில் அவர்கள் பற்றுறுதியைக் கைவிட துன்பப்படுத்தப்பட்டனர். மற்றவர்கள் பெற்றோரை வற்புறுத்தி தஞ்சை, இராமேஸ்வரம் ஆகிய புண்ணியத்தலங்களுக்கு அழைத்துச்சென்று தீட்சை பெற்று வந்தால் தான் சாபம் தீரும் எனக்கூறியதால் அங்கு சென்று வந்தனர். கிராமப்புறத் திருச்சபைகளைச் சந்திக்க வந்தவரை ராமானுஜம் சந்தித்து எனக்கு 18வயது நிரம்பிவிட்டது. வீட்டிலிருந்து எதையும் எடுத்துவரவில்லை. உங்களிடம் வந்தால் எனக்கு திருமுழுக்கு கொடுப்பீர்களா? என வினவினார். இதை அறிந்த பெற்றோர் அவரை மீட்டுச் சிறையில் வைத்தனர். இதைக்கேள்விப்பட்ட உள்ளூர் காவல் அதிகாரி அவரை அழைத்து ஏன் என்று வினவினார். ரங்கராமானுஜம் தனக்கு ஆண்டவர் மேல்



உள்ள பற்றுறுதியை விளக்கி, தான் 18வயது நிரம்பியுள்ளதால் என் விருப்பத்திற்குச் செல்ல அனுமதியுங்கள் என்றார். அந்த காவல் அதிகாரி இந்துவாக இருந்த போதிலும் அவருடைய பற்றுறுதியைக் கண்டு ஆச்சரியப்பட்டு அவரை விடுவித்தார். ரங்கராமானுஜம் அரும்பணியாளரைத்தேடிச் சென்றார். பெற்றோர் அவரை சென்ற இடமறிந்து எவ்வளவோ கெஞ்சிப்பார்த்தனர். ஜுலை 1911 ஒரு ஞாயிற்றுக்கிழமை கரூர் ஆலயத்தில் தன் பெயருக்கு முன் பால் என்பதைச் சேர்த்து 'பால்ரங்கராமானுஜம் என்ற பெயரில் திருமுழுக்குப் பெற்று, 15நிமிடம் தனது அனுபவ சாட்சியை பகிர்ந்துகொண்டார். 1913ஆம் ஆண்டு ஜனவரியில் மெடிஸ்ட் சினாட் கூடி பெங்களூரில் உள்ள ஐக்கிய இறையியல் கல்லூரிக்கு அவரை அனுப்பத்தீர்மானித்து. கல்லூரிக்குச் செல்லும் முன் களபயிற்சிக்கு கரூர் பகுதிக்கும் பின்னர் தாராபுரத்தில் பணி புரிந்த எல்லிஸ் உடன் தங்கி பணிபுரிய அனுப்பியது. ஐக்கிய இறையியல் கல்லூரி பெங்களூரில் நான்கு ஆண்டுகள் இறையியல் கல்வியை வெற்றிகரமாக முடித்து 1917 மே மாதம் நாகப்பட்டணம் சபையில் ஊழியராக நியமிக்கப்பட்டார். முதலாவது உலகப் போரில் ஈடுபட்டு மெசபத்தோமியாவில் தங்கியிருந்த போர் வீரர்களுக்கு இராணுவ குழுவாகப் பணியாற்ற அருள்திரு தியாப்பிலஸ் சுப்ரமணியம் என்னும் பிரமாணர் ஓய்வுபெற்றுத் திரும்பினார். அவ்விடத்தில் பால்ரங்கராமானுஜம் பணியாற்றச் சென்றார். தமிழர் தவிர பலரும் இராணுவத்தில் இருந்ததால் தெலுங்கு மற்றும் தென்னிந்திய மொழிகளைக் கற்கும் வாய்ப்பு கிடைத்தது.

ராமானுஜம் 12 வயதாக இருக்கும் போது 6வயது சிறுமிக்கு பெற்றோர் திருமணம் செய்து வைத்தனர். ராமானுஜம் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட பிறகு பெண்ணை ராமானுஜத்துடன் அனுப்பாமல் மறைத்து முகத்தைக்கூட பார்க்கவிடவில்லை. அவர் அனுப்பிய கடிதங்களும் அவரைச் சென்றடையவில்லை. மெசபத்தோமியாவிலிருந்து இந்தியா வந்து, தன் மனைவியை அழைத்துச்செல்ல விரும்பினார். மீண்டும் மறுத்தனர். ஒரு இஸ்லாமிய காவல்துறை அதிகாரி தலையிட்டு பெண்ணின் விருப்பத்தை அறிய கேட்டபோது தன் உறவினர்களிடமிருந்து தப்புவித்து, அணிந்திருந்த துணியுடன் தன் கணவரிடம் வந்து சேர்ந்தார். ராமானுஜம் அவரது மனைவியை மெசபத்தோமியா அழைத்து செல்வது எளிதாயிற்று.

### ஒரு கிறிஸ்தவ தலைவர்

இரண்டு ஆண்டுகள் பணியாற்றிய பின் 1919 ஆகஸ்டில் இந்தியா வந்தார். அவரது பணியின் அர்ப்பணிப்பைக் கண்டு கிறிஸ்தவ மாணவர் இயக்கத்தில் 1920 - 1926 வரை பயணச் செயலாளராகப் பணியாற்றினார். இந்தியா, இலங்கை, பர்மா போன்ற பல நாடுகளுக்கு சென்று பணியாற்றினார். 1922 பிப்ரவரி முதல் மே மாதம் வரை சீனாவில் உள்ள பீகிங்கில் உலகக் கிறிஸ்தவ மாணவப் பேரவை கருத்தரங்கில் கலந்துகொண்டார்.

### தலித் மக்களின் பாதுகாவலர்

தாராபுரத்தில் தலித் இனமக்கள் கும்பல் கும்பலாக கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட அக்காலத்தில், உயர் வகுப்பு இந்துகளாலும், நில உடமையாளர்களாகிய மிராசுதாரர்களாலும் பல்வேறு துன்பங்களை அனுபவித்து வந்தனர். தாழ்த்தப்பட்ட மக்களின் பாதுகாவலராகத் தம்மை அர்ப்பணித்தும் மக்களோடு மக்களாகவும் தம்மை இணைத்துகொண்டார். உயர்ஜாதி இந்துகள் கிறிஸ்தவர்களைத் துன்புறுத்தியபோது அவர்களை எதிர்த்து நின்றார். தாராபுரத்தில் செனட்ரல் சேகரம் அவரது பொறுப்பில் விடப்பட்டது. கிராமிய முறையில் வழிபாடுகள் நடத்தப்பட்டன. தன்னார்வ ஊழியர்களுக்குப் பயிற்சி அளித்தார். ஒவ்வொரு ஊழியரும் திருமறையை நன்கு பழகிக்கொள்ள ஆர்வமூட்டினார். கிறிஸ்து பிறப்பு, வருடாந்திர ஸ்தோத்திரப் பண்டிகை முதலியன சர்க்யூட் அளவிலேயும், சேகர அளவிலேயும் நடைபெற உற்சாகப்படுத்தி தலித்மக்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்த பெரும் முயற்சி எடுத்தார். தாராபுரத்தில் இருக்கும்போது நகராட்சி உறுப்பினராகவும், துணைத்தலைவராகவும், நகராட்சி தலைவராகவும் தெரிவுசெய்யப்பட்டார். அவர் காலத்தில் திருச்சபை வளர்ச்சி அபரிதமாக வளர்ந்தது பல நிறுவனங்கள் நிறுவப்பட்டது.

1932ல் இங்கிலாந்து மெதடிஸ்ட் திருச்சபைகளின் ஒருங்கிணைந்த கருத்தரங்கிலும் கலந்துகொண்டார். "கடவுள் இந்தியா மூலம் பேசுகிறார்'' என்று உரையாற்றினார். எந்த நாடும் கிறிஸ்துவின் வாழ்க்கைப் பள்ளியில் ஒழுங்கைக் கற்றுக்கொள்ளாமல் மக்களாட்சியைப் பாதுகாத்துக்கொள்ள முடியாது, கிறிஸ்துவை ராஜாவாக ஏற்றுக்கொள்வதன் மூலமே அரசியல் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணமுடியும் எனக்கூறினார். மனதை உருக்குகிற, சொல்வண்மையுள்ள அவரது அருளுரைகள் ஆற்றல்மிக்கதாயிருந்தது.

### திருச்சபை ஐக்கியத்தில் ஈடுபாடு

தென்னிந்திய திருச்சபை ஏற்படுவதில் பால்ரங்கராமானுஜத்தின் பங்களிப்பு முக்கியமானது. கூட்டுக்குழு செயலாற்ற முடியாமல் நின்றபோது, சாதுர்யமாக தன் தீர்க்கமான சிந்தனையால், பேச்சால் அவற்றைத் தீர்த்தார். ஒருமுறை ஆங்கிலிக்கன் திருச்சபை, அப்போஸ்தல முறையில் பேராயர் ஆளுகை முறையை வலியுறுத்தி அதில் அருட்பொழிவு பெற்றவர்கள் மட்டுமே திருப்பணியாற்ற இயலும், மற்றவர்கள் இணைய முடியாது என்ற போது, பால்ரங்கராமானுஜம் அருட்பொழிவில் இரண்டு பொருள்கள் பொதிந்து நிற்கின்றது: அருள் மற்றும் அதிகாரம். மற்ற திருச்சபைகள் அருளை வாய்க்காலாக ஏற்றுக்கொள்ளும்போது, ஆங்கிலிக்கன் திருச்சபை அதிகாரத்திற்கு அடிபணிபவர்களாகக் காணப்படுகிறார்கள் என்றது பிரச்சனையைத் தீர்த்தது.

### இந்தியத் திருச்சபைத் தலைவர்

அருள்திரு எல்லிஸ் அவர்களது பரிந்துரைப்படி ரங்கராமானுஜம் 1937ஆம் ஆண்டு முதல் தென்னிந்திய மெதடிஸ்ட் திருச்சபைக்கு இந்தியத் தலைவராகத் தெரிவுசெய்யப்பட்டார். 1946இல் கூடவிருந்த பொதுப்பேரவைக்கு தலைமை ஏற்கவேண்டிய காலத்தில் ரங்கராமானுஜம் நோய்வாய்ப்பட்டார். மதுரை அமெரிக்கன் மருத்துவமனைக்கு அழைத்துச்செல்லப்பட்டார் ஆனால் மறுநாள் 1945ஆம் ஆண்டு ஜுலை 4ம் நாள் ஆண்டவரண்டையில் சேர்த்துக்கொள்ளப்பட்டார். அவர் உடல் திருச்சி கொண்டுவரப்பட்டு அன்று மாலை திருச்சி, கிறிஸ்டோபர் ஆலயக்கல்லறைத் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டார். கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஏறத்தாழ 20 ஆண்டுகள் ஊழியம் செய்தார். இவரது பணி இன்றும் அவர் பணிசெய்த கிராமங்களில் பேசப்படுகிறது.



அருள்திரு H ஜான் சாமுவேல் ,
பண்டாரசெட்டிவிளை

முதல் இந்திய ஆங்கிலிக்கன் பேராயரான

# இந்திய குருவானவர்- பேராயர் அசரியா

பரந்து விரிந்து கிடக்கும் பாரத தேசத்தின் கடைமுனையான தென் தமிழகம் ஆன்மீகத்தில் எழுச்சியடைந்த காலம் அது. ஹராப்பா மோக ஜந்தாரோ ஆகிய கலாச்சாரங்களுக்கு இணையான காலத்தில் ஆற்றின் படுகையில் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் கூட்டம் வசித்த பூமி இது. செழிப்பான தாமிரபரணியினைச் சூழ மக்கள்கூட்டம் ஏராளமாக வசித்து வந்தார்கள். ஒரு புறம் ஆற்றுப்படுகையின் அருகில் கூடி வாழ்ந்த மக்கள், மற்றொரு புறம் கடல் அருகே வசித்த ஒரு கூட்ட மக்கள் மற்றோருபுறம் செம்மண் தேரிக்காட்டுக்குள்ளாக தங்கள் வாழ்நாட்களை பனைமரத்தினை நம்பி வாழ்ந்து கொண்டிருந்த மக்கள். செம்மண்தேரி ஆண்டவரின் ஆசீர்வாதத்தை அக்காலங்களில் மிக அதிகமாக பெற்றது. அநேக மிஷனெரிகள் செம்மண் தேரிக்காட்டுப்பகுதியில் வசித்த மக்களை சந்தித்து இறையன்பினை பகிர்ந்து கூறியதின் விளைவாக அநேக மக்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

**வெள்ளாளன்விளையில் கிறிஸ்தவம்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் விவசாயத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்த ஒரு கூட்ட நாடார் இனமக்கள் தற்போது அமைத்திருக்கும் வெள்ளானன்விளைக்கு அருகேயுள்ள மானாடு என்னும் இடத்தில் வாழ்ந்த வெள்ளாள இனமக்களின் விவசாய நிலத்தினை விலைக்கு வாங்கி குடியேற ஆரம்பித்தார்கள். வெள்ளாளர்களின் விளை ஆக அது இருந்தபடியினாலே இவர்கள் வாங்கி குடியேறிய இடம் வெள்ளாளன்விளை என்று அழைக்கப்பட்டது. நெல்லை அப்போஸ்தலன் என்றழைக்கப்படும் அருள்திரு. C.T.E. ரேனியஸ் ஐயரவர்களின் கண்களில் பட்டது வெள்ளாளன்விளை. இயேசுவின் அன்பை அதுவரை அறியாத இம்மக்கள் இயேசுவை அறிய ஆரம்பித்தார்கள். அருள்திரு C.T.E. ரேனியஸ் ஐயரவர்கள் விதைத்த விதை நல்லநிலத்தில் விழுந்த விதையாக மண்ணுக்குள் புதைத்து கிடந்தது. எனினும் ஒரு சில காரணங்களால் முளைவிடவில்லை. ஆனால் 1838ம் ஆண்டு, மெஞ்ஞானபுரத்தில் சுவிசேஷகராக பணியாற்றி கொண்டிருந்த அருள்திரு ஜாண்தாமஸ் ஐயரவர்கள் இக்கிராம மக்களுக்கு இயேசுவின் அன்பை போதிக்க ஆரம்பித்தார்கள், சுவிசேஷத்தின் காரணமாக வெள்ளாளன்விளை மக்கள் இயேசுவை அறிய ஆரம்பித்தார்கள். ஒரு கூட்ட மக்கள் கிறிஸ்தவர்களாக மாறினார்கள், மக்கள் இயேசுவின் அன்பை ஏற்று கிறிஸ்தவர்களாக மாறினபடியினால் ஆண்டவரை ஆராதிப்பதற்கு ஆலயம் வேண்டுமென்று 1841ம் ஆண்டு வெள்ளானன்விளை கிராமத்தில் புதிய ஆலயம் ஒன்றினை கட்டி மக்கள் ஆண்டவரை தொழுதுகொள்ள ஆரம்பித்தார்கள்.

**பேராயர் அசரியா அவர்களின் குடும்பம்.**

ஜாண் தாமஸ் ஐயரவர்களுடைய ஊழியத்தின்

பயனாக 1839ம் ஆண்டு வேலாயுதம் என்பவர் இயேசுவை ஏற்றுக்கொண்டார். இயேசுவின் மீது இவர் காட்டிய அன்பும், கிறிஸ்தவத்தின் மீது இவர் கொண்ட வைராக்கியமும் ஜாண் தாமஸ் ஐயரவர்களை வெகுவாக கவர்ந்தது. வேலாயுதம் அவர்கள் ஞானஸ்நானம் பெறுவதற்காக ஜாண் தாமஸ் ஐயரவர்களை அணுகவே, வேதநாயகம் தாமஸ் என்ற பெயரிலே ஞானஸ்நானம் கொடுத்து கிறஸ்தவ ஐக்கியத்தில் ஏற்றுக்கொண்டார். வேலாயுதம் தாமஸ் அவர்களின் நன்னடத்தையும், அதிக தெய்வ பக்தியும் பெரிய மாற்றத்தினை வெள்ளானன்விளை கிராமத்திற்கு கொண்டுவர முடியுமென்று ஐயரவர்கள் நம்பினார்கள். அவரைக் கொண்டே அவரது கிராமத்திற்கு பெரிய ஊழியம் செய்யமுடியும் என்று தீர்மானித்த ஜாண் தாமஸ் ஐயரவர்கள் வெள்ளாளன்விளை சபையை நடத்துவதற்கு தேவையான அனைத்து பயிற்சிகளையும் கொடுத்து அதே கிராமத்தில் சபை ஊழியராக நியமித்தார்கள். சபை ஊழியராக நியமிக்கப்பட்ட வேதநாயகம் தாமஸ் அவர்கள் 1869ம் ஆண்டு ஜனவரி மாதம் 18ம் தேதி அன்று பாளையங்கோட்டை பரி. திரித்துவ பேராலயத்தில் உதவிகுரு அபிஷேகம் பெற்றார். இரண்டு ஆண்டுகள் உதவி குருவாக பணியாற்றிய பின்னர் குருவாக அபிஷேகம் பெற்றார். இவரது அயராத பணியினாலே 1879ம் ஆண்டு வெள்ளாளன்விளை கிராமத்தில் அழகிய ஆலயம் ஒன்றினைக் கட்டி முடித்தார்.

**வேதநாயகம் சாமுவேல் அசரியா**

அருள்திரு தாமஸ் வேதநாயகம், திருமதி. ஹெலன் தம்பதியருக்கு 1847ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 17ம் தேதி பிறந்தவர் தான் வேதநாயகம் சாமுவேல் அசரியா ஆவார். சாமுவேல் அசரியா அவர்கள் பிறந்ததுமே கர்த்தர் ஆண் பிள்ளையைக் கொடுத்திருக்கிறார் என்று அவருக்கு நன்றி செலுத்தும்படியாக சாமுவேலைப் போன்று கர்த்தருடைய ஊழியத்திற்காக அர்ப்பணித்தார்கள். வேதநாயகம் சாமுவேல் அசரியா அவர்கள் தன்னுடைய ஆரம்ப கல்வியை சொந்த ஊரான வெள்ளாளன்விளை கிராமத்திலேயே ஆரம்பித்தார்கள். அன்றைய நாட்களில் கிராமப் பள்ளிகளில் உயர்ந்த வகுப்பு மூன்றாம் வகுப்பு வரை மட்டுமே. எனவே அக்கல்வியை அங்கு முடித்துவிட்டு அருகான கிராமமாகிய மெஞ்ஞானபுரத்தில் தொடர்ந்தார்கள். பள்ளிப்படிப்பை முடித்தபின் பாளையங்கோட்டையில் அன்று CMS கல்லூரி என்றும் இந்நாட்களில் தூய யோவான் கல்லூரி என்று பெயர் பெற்ற கல்லூரியில் தன் படிப்பை முடித்துவிட்டு பின்னர் சென்னையில் அமைத்திருக்கும் மெட்ராஸ் கிறிஸ்தவ கல்லூரியில் (Madras Christian College (MCC) இளங்கலை பயின்றார். சென்னையில் பயின்று கொண்டிருந்த போது கிறிஸ்தவ வாலிபர் சங்கத்தாருடன் ஏற்பட்ட தொடர்பால் அதின் செயலராக 1895ம் ஆண்டு பொறுப்பேற்றார்.

இளம்வயது முதலே கிறிஸ்துவின் மீதும் ஊழியத்தின் மீதும் அதிக பற்றுள்ளவராக காணப்பட்டார். மெஞ்ஞானபுரம் இல்லத்தில் தங்கி பள்ளிப்படிப்பு பயின்று கொண்டிருக்கும் போது ஒரு முறை, உகாண்டா தேசத்தில் இரத்த சாட்சியாக மரித்த பேராயர் ஹானிங்டன் (Bishop Hannington of Uganda) அவர்களைக் குறித்த செய்தியினைக் கேட்டார். தன் கைகளில் அணிந்திருந்த தங்க வளையலை உகாண்டா தேசத்தில் நடைபெறும் ஊழியத்திற்காக காணிக்கைப்பைகளில் கழற்றி போட்டுவிட்டார்.

வாலிபனாக இருக்கும்போது இந்திய தேசம் இயேசுவை அறிய வேண்டுமென்ற பெரிய பாரத்தைக் கொண்டிருந்தவர் அசரியா அவர்கள். 'சுவிசேஷத்தை பிறர்க்கு அறிவிக்காத திருச்சபை செத்தது' என்று அடிக்கடி தம் நண்பர்களுடனும் ஆலயத்திலும் கூறுவார். 1902ஆம் ஆண்டிலே ஒரு முறை யாழ்ப்பாணம் செல்லும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. அங்கிருந்த கிறிஸ்தவர்கள் ஏறெடுத்த ஜெபமானது அசரியா அவர்களை வெகுவாக உலுக்கியது. அம்மக்கள் இந்திய தேசத்தின் தமிழகத்திலுள்ள திருச்சபைக்காக ஜெபித்துக் கொண்டிருந்தார்கள். இலங்கை மக்கள் வெளிநாட்டில் ஊழியம் செய்வதற்காக ஏற்படுத்தியிருந்த மிஷனெரி சங்கத்தினைக் குறித்து அறிந்தார். அந்த சமயமே தானும் ஒரு மிஷனெரியாக பணியாற்ற வேண்டுமென்று தன்னை அர்ப்பணித்தார். அங்கிருந்து திரும்பிய அவரது உள்ளத்தில் மிஷனெரி சங்கம் அமைத்து இந்திய தேசத்தை கர்த்தருக்குள்ளாக கொண்டுவர வேண்டுமென்ற ஆத்துமபாரம் வெகுவாய் வளர்ந்தது. அதின் விளைவாக 1903ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 12ம் தேதி அன்று **இந்திய மிஷனெரி சங்கம்** என்னும் சுயாதீன சங்கம் ஒன்றினை ஆரம்பித்தார்கள். 'இந்திய மக்களைக் கொண்டு, இந்திய பணத்தின் மூலம் இந்திய மக்களை சந்திக்க வேண்டும்' என்பதுதான் இச்சங்கத்தின் முக்கிய அம்சமாகும்.

இந்திய மிஷனெரி சங்கத்தினை ஆரம்பித்ததோடு கூட அவரது ஆத்தும தாகம் நின்று போகவில்லை. கிறிஸ்துவுக்காக வைராக்கியம் பாராட்டும் இந்திய இளம் தலைவர்களை உருவாக்க வேண்டுமென்ற தாகம் அசரியா அவர்களுக்குள்ளாக வளர ஆரம்பித்தது. அதின் விளைவாக கிறிஸ்து பிறந்த நாளன்று 1905ம் ஆண்டு கொல்கத்தா மாநிலத்திலுள்ள புகழ் பெற்ற வில்லியம் கேரியின் நூலகத்தில் வைத்து தேசிய மிஷனெரி சங்கம் The National Missionary Society of India(NMS) என்ற பெயரில் ஒரு ஊழிய ஸ்தாபனத்தை ஏற்படுத்தினார். திரு. அசரியா அவர்கள் ஏற்படுத்திய இச்சங்கமானது விடுதலைப் போராட்ட சூழலில் பெரும் மதிப்பை பெற்ற ஒன்றாக அமைந்தது. வெளிநாட்டு பொருட்களை இந்தியர்கள் வாங்கக்கூடாது என்ற சூழலில் இந்திய பணத்தை மட்டுமே கொண்டு செயல்பட வேண்டுமென்றது பெரும் பாராட்டையும் வரவேற்பையும் பெற்றது. திரு. அசரியா அவர்கள் ஆரம்பித்த இரண்டாவது சுதேசி மிஷனெரி இயக்கமாக இது காணப்பட்டது.

1898ம் ஆண்டு ஜுன் மாதம் 29ம் தேதி அன்பு மரியாள் என்ற பெண்ணை திருமணம் செய்தார். அன்பு மரியாளின் அன்பும் ஆதரவும் வேதநாயகம் சாமுவேல் அசரியா அவர்களின் ஊழியத்திற்கு பெரும் பக்கபலமாக அமைந்தது. பற்பல உலகப்பிரகாரமான வேலைகளை செய்து, பின் ஆண்டவரின் அழைப்பினை ஏற்று ஊழியப்பாதைக்கு திரும்பலானார் திரு. அசரியா அவர்கள். ஊழியத்தின் பாதையில் 1909ம் ஆண்டு ஜுன் மாதம் 29ம் தேதி அன்று சென்னை பேராயர் ஒயிஹெட் அவர்கள் உதவிகுருவாக அபிஷேகம் செய்தார்கள். அதன்பின்னர் அதே ஆண்டில் டிசம்பர் மாதம் குருவானவராக அபிஷேகம் பெற்றார்.

தோரணக்கல் பகுதியில் மிஷனெரி தேவை என்ற ஆத்தும பாரத்தை ஒரு கூட்டத்தில் பகிர்ந்து கொண்டிருந்த அருள்திரு அசரியா ஐயவரவர்களுக்கு, தான் ஏன் அந்த ஊழியத்தினை நிறைவேற்ற கூடாது என்ற உணர்வு

ஏற்பட்டது. உடனடியாக தன் பணியினை தமிழகத்தில் விட்டுவிட்டு தானே ஒரு மிஷனெரியாக பிரயாணப்பட்டார். அருள்திரு. அசரியா ஐயரவர்களின் வருகையினால் தோர்ணக்கல் பெரிய ஆசீர்வாதத்தைப் பெற்றது. குருவானவராக அபிஷேகம் செய்யப்பட்டு மூன்று வருடங்களுக்குள்ளாக இந்தியர் ஒருவர் பேராயராக திருநிலைப்படுத்தப்படும் வாய்ப்பு ஐயரவர்களுக்குக் கிடைத்தது. 1912ம் வருடம் டிசம்பர் மாதம் தோர்ணக்கல் திருமண்டலத்தின் முதல் பேராயராக கல்கத்தா தூய. பவுலின் ஆலயத்தில் அபிஷேகம் செய்யப்பட்டார்கள். இந்திய தேசத்தின் பல பகுதிகளிலிருந்து பதினோரு பேராயர்கள் கலந்து கொண்டார்கள். ஆங்கிலேய திருச்சபையில் இந்தியர் ஒருவர் பேராயராக்கப்படுவது இதுவே முதல்முறை அந்த பாக்கியம் பேராயர் அசரியா அவர்களுக்குக் கிடைத்தது. பேராயராக பணியினை செய்யும் சிலாக்கியம் கிடைத்தாலும் கூட ஒரு சிறிய குடிசை வீட்டில் இருந்தபடியே தன்னுடைய ஊழியத்தினை தொடர்ந்தார்கள்.

பேராயர் அசரியா அவர்களின் ஊழியத்தின் பயனாக சுமார் இரண்டு இலட்சத்திற்கும் அதிகமானவர்கள் கிறிஸ்துவை ஏற்று கொண்டு திருச்சபையில் இணைந்தார்கள். இறைபணியோடு கூட சேர்த்து கல்விப் பணியினையும் மேற்கொண்டார்கள். குறிப்பாக பெண்குழந்தைகளின் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்தார்கள். 1924ம் ஆண்டிலே தோர்ணக்கல் திருமண்டலத்தில் 8 வெளிநாட்டு குருவானவர்களும் 53 இந்திய குருமார்களும் ஊழியம் செய்தார்கள். இன்று தோர்ணக்கல் திருமண்டலம் இமாலய வளர்ச்சியைப் பெற்று மேலும் இரண்டு திருமண்டலங்களாக பிரிந்துள்ளது.

பேராயர் அசரியா அவர்கள் சுதேசமயமாக்குதலில் மிகுந்த ஆர்வமுடையவர்கள். வெளிநாட்டிலிருந்து கிறிஸ்தவம் இந்திய தேசம் வந்தடைந்தாலும் உள்ளூர் மக்களும் அதனை வெறுப்படையாது ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதில் அதிக கவனமுடையவர். அதற்கு சான்றாக அவர்கள் கட்டியெழுப்பின தோர்ணக்கல் ஆலயம் விளங்குகிறது. தோர்ணக்கல் ஆலயத்தின் அமைப்பு இந்து கோயில்களை ஒத்தும், அதின் கோபுரங்கள் இஸ்லாமியர்களுடைய மசூதிகளின் அமைப்பினைக் கொண்டதாயும், உட்புறம் அமைக்கப்பட்டுள்ள தூண்களில் திராவிட கட்டிட கலையம்சமான வாழைப்பூ உருவமும், தாமரைப்பூவும், சிலுவை வடிவமும் அமைக்கப்பட்டுள்ளது. பேராயர் அசரியா அவர்கள் ஆலயத்தின் ஆராதனை முறைகளிலும் கூட பெரும் மாற்றத்தை ஏற்படுத்தினார். ஆங்கிலேய திருச்சபையின் பேராயராக இருந்த பொழுதிலும் இந்திய பாரம்பரியங்கள் ஆராதனைகளில் இருப்பதை உறுதிசெய்தார். மக்கள் தரையில் அமர்ந்து இறைவனை வழிபட செய்தார். ஆலயங்களில் காணிக்கைகள் சேகரிக்கப்படுவதை விரும்பாமல் மக்கள் படைக்க வேண்டுமென்று விரும்பினார். பைகளில் காணிக்கைகள் சேகரிக்காமல் ஆலயத்தில் ஆங்காங்கு வைக்கப்பட்டிருக்கும் சொம்புகளில் காணிக்கைப் படைப்பதற்கு மக்களுக்குக் கற்பித்தார்.

பேராயர் அசரியா அவர்களின் சீரிய முயற்சியினால் 1919ம் ஆண்டு தரங்கம்பாடியில் கூடிய கிறிஸ்தவ தலைவர்களின் கூட்டம் சிதறிக்கிடக்கும் கிறிஸ்தவ திருச்சபைகளை ஒன்றிணைக்கும் பெரும் முயற்சியில் ஈடுபட்டது. அன்றைக்கு பேராயர் அசரியா அவர்கள் திருச்சபையை ஒன்றிணைப்பதற்காக விதைத்த விதையானது அவரது காலத்திற்கு பிறகு 1947ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 27ம் தேதி தென் இந்திய திருச்சபையாக உருவானது. பேராயர் அவர்களின் ஊழியம் மிக சிறப்பாக நடைபெற்று வந்தது. 1945ம் வருடம் ஜனவரி மாதம் 1ம் நாள் தோர்ணக்கல் திருமண்டலமே துக்கத்தில் அமிழத்தக்கதாக பேராயர் அசரியா அவர்களின் இன்னுயிர் சிறிது பலவீனத்திற்குப் பிறகு பிரிந்தது. தோர்ணக்கல் மக்களுக்காகவே தன் வாழ்வை செலவழித்த செம்மலின் திரு உடலை தோர்ணக்கல் பேராலயத்தின் வளாகத்திலேயே அடக்கம் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு, ஜனவரி மாதம் 2ம் தேதி மாலை 5 மணிக்கு அடக்கம் செய்யப்பட்டது.

# அருள்திரு ஞானமுத்து ஐயர்

## அவர்கள் ஊழியமும் சுருக்க வரலாறும்

**அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்**

கனம் ஞானாயுதம் ஞானமுத்தையர். இவர் வைராக்கிய இந்து பெற்றோருக்குப் பிறந்தவர். இவரது சொந்த ஊர் பள்ளிப்பத்து என்ற கிராமம். இவர் பிறந்த வருஷத்தைப் பற்றி அபிப்பிராய பேதங்களுண்டு. சென்னை அத்தியக்ஷாதீனத்தின் சரித்திர நூலாசிரியரான ராவ்சாகிப் S.K. தேவசிகாமணி B.A., L.T., அவர்கள் ஞானமுத்தையர் 1824, ஏப்ரல் 24ல் பிறந்ததாகவும், 36 வயதுடையவராய் 1860ம் ஆண்டில் மரித்ததாகவும் எழுதியுள்ளார்கள். ஆனால் மகாகனம் F. வெஸ்டர்ன் அத்தியக்ஷரவர்களின் Register of Tinnevelly Clergy என்ற நூலில் ஞானமுத்தையர் 1824, ஜூன் 24ல் ஞானஸ்நானம் பெற்றுள்ளதாகக் குறிப்புண்டு (பிறப்பு தேதி கொடுக்கப்படவில்லை) இவ்விரண்டு கூற்றுகளில் அத்தியக்ஷரது கூற்றே ஒப்புக்கொள்ளத்தக்கது. ஏனெனில் அக்காலத்தில் இந்தியர் சுமார், 40, 45 வயதுக்குப்பின்பே குருப்பட்டம் பெற்றனர். 1824ல் இவர் பிறந்ததுண்டானால் 33 வயதில் பட்டம் பெற்றாரென்கிறது. (1857ல் இவர் உதவிக்குருப்பட்டம் பெற்றார்) மேலும் உதவிக்குருப்பட்டம் பெறும் முன் இவர், உபதேசியராகவும், விசாரணை உபதேசிகராகவும் சில வருடங்கள் பணியாற்ற வேண்டும். இந்தக் காரணம் கொண்டும் இது போன்று பிற நியாயம் காரணமாயும் ஐயர் பிறந்த வருஷம் நாமறியோம் என்றும், இவர் 1824ம் ஆண்டில் கிறிஸ்துவைத் தம் எஜமானாக ஏற்றுக்கொண்டார் என்றும் கொள்வோம்.

கனம் ஞானமுத்து ஐயர் நாசரேத்து ஆண்கள் பாடசாலையில் கற்றுத் தேர்ந்து அவ்வூர் மிஷனெரி கனம் A.F. கேமரர் ஐயரிடம் நற்சாட்சி பெற்று, அவரது சிபாரிசின் பேரில் இடையன்குடி கனம் கால்டுவெல் ஐயரால் வேலைக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டார். ஞானமுத்தின் பக்தியை மெச்சிய கால்டுவெல் மிஷனெரி, அவர் உபதேசிகர் வேலைக்குத் தகுதியுடையவர் எனத் தேர்ந்து அவருக்கு அதற்கான பயிற்சி கொடுத்தார். அவரது அறிவு, புத்தி நுட்பம், ஞாபக சக்தி முதலிய திறமைகள் கால்டுவெல்லின் பிரியத்தைச் சம்பாதித்தன. இடையன்குடிக்கு விசாரணை உபதேசியாராய் நியமிக்கப்பட்ட பின், ஞானமுத்து செய்து வந்த உத்தம ஊழியத்தின் பயனாக இடையன்குடியிலுள்ள சாயக்காரர், தட்டார், வணிகர் முதலியவர்களில் பலர் ரட்சிப்பின் திவ்விய மார்க்கத்தைச் சேர்ந்தார்கள். இச்சிறந்த இவ்வூழியத்தை மெச்சி, கனம் கால்டுவெல் ஐயர் ஞானமுத்து குருப்பட்டத்துக்குத் தகுதியுடையவர் என்று சென்னை அத்தியக்ஷருக்குச் சிபாரிசு செய்ததின் பேரில் 1857, ஜூலை 7ல் உதகமண்டலத்தில் அவ்வத்தியக்ஷர் அவருக்கு, உதவிக்குருப்பட்டம் கொடுத்தார். அதன் பின் அவர் கிறிஸ்தியாநகரத்துக்கு முதல் இந்திய குருவாக 1856ம் ஆண்டு நியமிக்கப்பட்டார். ஒரே வருஷச் சேவையின் இறுதியில் ஐயர் புதியம்புத்தூர் மிஷனெரி கனம் J.F. கோர்ன்ஸ் ஐயருக்கு உதவியாக மாற்றப்பட்டார். புதியம்புத்தூர் வட்டகையில் மறவன்மடம், சேர்வைக்காரன்மடம், புதுக்கோட்டை (இவை அக்காலம் புதியம்புத்தூரைச் சேர்ந்திருந்தன) என்ற இடங்களில் அநேக ஆத்துமாக்கள் கிறிஸ்துவின் தொண்டர்களாவதற்கு தாம் புதியம்புத்தூர் மிஷனில் ஊழியம் செய்த 10 மாதங்களில் கர்த்தரின் கையில் ஓர் உத்தம கருவியாய் விளங்கினார். அங்கிருக்கும்போது வியாதிப்பட்டு இடையன்குடிக்கு வந்து 1860, பிப்ரவரி 14ல் நித்திய இளைப்பாறுதலுக்குட்பட்டார். ஞானமுத்து ஐயர் கிறிஸ்து மதப்பிரசாரம் செய்வதில் மிக வைராக்கியமுள்ளவர். அநேகரைக் கிறிஸ்துவின் தொண்டராக்கினவர்; மிகப் பொறுமையுள்ளவர்; யாவராலும் நற்சாட்சி பெற்றவர்; வேத பாடப்பரீக்ஷைகளில் முதலாவதாகத் தேறி அநேக பரிசுகள் பெற்றவர்; ஏழைகள், திக்கற்றவர்களுக்குச் சகாயம் செய்வதில் முதன்மையானவர்.




### வரலாற்று செய்தி

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் வரலாற்றுச் சுவடுகள் மாத இதழை டோனாவூர் உவாக்கர் மேல்நிலைப்பள்ளி தலைமையாசிரியை திருமதி.வசந்தி ஜான்சிராணி அவர்களிடம், அறிமுகப்படுத்திய பொழுது. உடன் நமது இதழின் கௌரவ ஆசிரியர் முனைவர் திருமதி. ஜான்சி பால்ராஜ்

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்-2)

## மந்திராலோசனை:-

அரசரின் அவசர அழைப்புக்கு இணங்கி பிரதான், சேனாபதி, பிராத்விவாகா (தலைமை நீதிபதி), திவான், புரோகிதர் முதலியோர் ஆஸ்தான மண்டபத்தில் குழுமியிருந்தனர். என்னவோ ஏதோ என்ற பதட்டம் அனைவருக்கும் இருந்தது. பெரிய வாசல் அருகே கூடிநின்று தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருந்தனர். திவான் ஒருவர் தான் நாற்பது வயதுக்கு உட்பட்டவர். மற்றவர் அனைவரும் வயது சென்றவர்கள். பிரதம நீதிபதி மட்டும் தமிழ்ப் பிராமணர்; மற்றவர்கள் மராட்டியர். எல்லோருமே தர்பார் உடை அணிந்திருந்தனர். வெள்ளைப் பட்டு வேட்டி உடுத்தி நீலப் பட்டால் ஆகிய நீண்ட அங்கி அணிந்து அங்கிக்கு மேல் ஜரிகைக் கரையிட்ட வெள்ளைத் துணி ஒன்றையும் இடுப்பில் கட்டியிருந்தனர். கால்களில் ஒன்றும் அணிந்திருக்கவில்லை. புரோகிதரையும் பிராத்விவாகாவையும் தவிர மற்றவர்கள் பெரிய மீசையுடனும் கிருதாவுடனும் பூதாகாரமாகக் காட்சியளித்தனர்.

போர்க்களத்திலிருந்து செய்தியா? அதெப்படி? எனக் கல்லவா செய்தி வந்திருக்கவேண்டும்' என்று வெடித்தார் சேனாபதி மங்கோஜி. அவர் ஒரு திறமைசாலி. ஆனால் பதவிப் பிரியர். பெரிய அரசியலறிஞராக விளங்க ஆசைப்பட்டார்.

செய்தி, நேரே பண்டிதராவுக்குத்தான் வந்ததாம். மகன் அனுப்பியிருப்பான்போலும். எனக்கும் ஒன்றுமே தெரியவில்லை' என்றார் பிரதான்ஜி. அகலமான நெற்றி, அவருடைய ஆழ்ந்த அறிவைப் புலப்படுத்தியது. அதுமட்டுமல்லாமல் அரசரின் குடிகளில் அவர்தான் செல்வந்தர் என்று வேறு பேச்சு அடிபட்டது. அரசருக்கு மறுபேச்சுப் பேசாமல் அடிபணியும் முதல் அமைச்சர் அவர்.

திவான் ராமண்ண பண்டிதர் சற்று எரிச்சலுடன், 'பண்டிதர் மகன் என்றால் என்ன கொம்பா முளைத்திருக்கிறது? அவனும் சேனாபதிக்குக் கீழே உள்ள தலைவன் தானே? இராணுவ ரகசியங்களை சேனாபதிக்கு அனுப்பாமல், தன் தகப்பனாருக்கு ஏன் அனுப்புகிறான்?' என்றார். 'ஏனென்று எதிரொலிதான் அறியும்' என்றார் நீதிபதி இரத்தினச் சுருக்கமாக.

'அப்பனைப்போல் பிள்ளை' என்று புரோகிதர் தம் பங்குக்குச் சொல்லி வைத்தார்.

'பண்டிதராவுக்கு தான் தான் ராஜாவென்ற நினைப்பு! பிரதான்ஜீக்கும் மேலாக எல்லா மந்திரிகளுடைய அதிகாரத்தையும் பிடுங்கிக்கொண்டு அரசரையும் வேறு ஆட்டி வைக்கிறார்-' எஸ் . . . ஸ் . . . மெதுவாகப் பேசும் . . . இந்த மண்டபச் சுவர்களுக்குக்கூடக் காதுகள் உண்டு. அதோ, அந்தக் காவலன் நம் பேச்சை ஒட்டுக் கேட்பதுபோல் தெரிகிறது. ம் ... உள்ளே போய்ப் பேசலாம்,' என்று பிரதான் எச்சரித்தார். - மூவரும் கொலுமண்டபத்தினுள் நுழைந்தனர்.

'பண்டிதராவின் மகன் தளவாயை முறியடித்து வெற்றி வீரனாகத் திரும்பினால், நமது கதி என்ன ஆகுமோ? இப்போதே அவர் அகம்பாவம் சகிக்க முடியவில்லை. இந்தப் பெருமை வேறு சேர்ந்துவிட்டால் . . . ஹூம் . . . நாமெல்லாம் பதவியைத் துறந்துவிட்டு காட்டுக்கு ஓடவேண்டியது தான்-' என்று பெருமூச்சு விட்டார் சேனாபதி.

ஹூம், அவர் மகன் முராரிராவ் நேற்றுவரை வேதபாராயணம் பண்ணிக்கொண்டிருந்தவன். அப்பனைப்போல் அறிவாளியாக வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தவனைப் பிடித்துச் சண்டைக்கு அனுப்பி விட்டார். புத்தகப் புழு வாள்பிடிப்பதென்ன இலேசான காரியமா? கிரகங்கள் வேறு சாதகமாயில்லை. நீர் ஏன் பயப்படுகிறீர் சேனாபதி யாரே! பண்டிதராவின் அழிவுகாலம் நெருங்கிவிட்டதென்றே எனக்குப் படுகிறது' என்றார் திவான். 'மகாராஜா சூட்சும அறிவு படைத்தவர் தான். இருந்தாலும் பண்டிதராவின் பின்பாட்டுக்குத்தான் இன்னும் ஆடிக் கொண்டிருக்கிறார். அவருடைய செல்வாக்கினாலும், தந்திரத்தினாலும் தான் தமக்கு அரசுரிமை கிடைத்தது என்று நினைக்கிறார் போலும். சேனாபதியும் நானும் கூட அதற்காக எவ்வளவோ முயற்சி செய்தோம் என்பது கடவுளுக்குத் தெரியும். இருக்கட்டுமே, அதற்காக அரசர் என்று சிம்மாசனத்தில் இருப்பவர் இன்னொருவருக்குச் சதா பணிந்து கொண்டா இருப்பது? பண்டிதராவ் மகாராஜாவுக்குச் சொக்குப்பொடி போட்டிருக்கிறார் என்று ஜனங்கள் பேசிக்கொள்வது கூட உண்மை தானோ, என்னவோ?' என்றார் பிரதான்.

'சோழச் சக்கரவர்த்தி மகாராஜா திராஜா மகாராஷ்டிர வீரசிரோமணி ஸ்ரீ பிரதாப்சிங் மகாராஜா பஹதூர் வாழ்க' என்று கட்டியக்காரன் முழங்கிக்கொண்டே மந்திரிகள் அருகில் வந்துவிட்டான். பேச்சில் மூழ்கியிருந்த மந்திரிகள் ஒருகணம் திடுக்கிட்டுவிட்டனர். சேவகன் பட்டுத் திரையை விலக்க தஞ்சை மன்னர் மகாராஜா பிரதாப்சிங் கொலுமண்டபத்துக்குள் நுழைந்தார். மந்திரிகள் தாழ்ந்து வணங்கினர்.

புன்முறுவலுடன் தலையசைத்து விட்டு அரியணையில் அமர்ந்தார் அரசர். நடுத்தர உயரம். சற்றுப் பருமனான சரீரம்.

ஆடம்பரமற்ற உடை கூட அவருடைய அழகான உருவமைப்புக்குப் பொருத்தமாக இருந்தது. அமாத்யா (அந்தரங்கச் செயலாளர்) வெங்கண்ண பண்டிதர் அரசருடனே வந்து சிம்மாசனத்தின் பின்னே ஒதுங்கி நின்றார். அவர் திவானின் தம்பி. பார்ப்பவர்களை அச்சுறுத்தும் வகையில் கபடமும் சூதும் தெரியும் முகம். அகத்தின் அழகு முகத்தில் தெரியு மல்லவா? பின்னர் வளர்ந்து மெலிந்த உடலோடும், நன்கு சவரம் செய்த கடுமையான முகமும் கொண்ட ஒரு முதியவர் உள்ளே நுழைந்தார். கவலையாலும், யோசனையாலும் அவர் நெற்றியில் சுருக்கங்கள் விழுந்திருந்தன. எதையோ ஒன்றைப் பற்றித் தனக்குள்ளே தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருப்பவர் போல் தோன்றினார். வரும்போதே மந்திரிகள் ஒவ்வொருவர் முகத்தையும் கூர்ந்து கவனித்துக் கொண்டே வந்தார். அவர் பார்க்கும் நபரின் எண்ண அந்தரங்கங்களையெல்லாம் துருவிப் படம் பிடித்துவிடுவது போலிருந்தது அவர் பார்வை. மற்றவர்களைப் போல இல்லாமல் வேட்டி உடுத்து, மேலே வெளிறிய சாம்பல் நிற சால்வையைப் போர்த்தியிருந்தார்.

அரசர் அமர்ந்தவுடன் மந்திரிகள் மேடை முன்னால் எதிரெதிராக இருந்த ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். இடதுபுறத்தில் இருந்த முதல் ஆசனத்தில் யாரும் அமரவில்லை. முதியவருக்கான ஆசனம் அது. ஆனால் அவர் அதில் உட்காராமல் மெதுவாகச் சென்று மேடைமீது அரசருக்கு வலதுபுறத்தில் அமர்ந்து கொண்டார். தீட்டு காரணமாக தாம் விலகி அமர்வதாகச் சொன்னார்.

நல்லவேளை! மேடைமேல் இன்னொரு சிம்மாசனம் போடச் சொல்லாமல் போனாரே' என்று உரக்கவே முணுமுணுத்தார் சேனாபதி.

அரசர் பேசத் தொடங்கினார்: 'மந்திரி பிரதானிகளே! அலுவல்களைத் தொடங்குவதற்கு முன்னால் ஒரு மங்களகரமான செய்தியைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நமது அருமை பண்டிதராவுக்கு இன்று காலையில் பேத்திக் குழந்தை பிறந்திருக்கிறது. தாயின் உடல்நிலை நன்றாக இல்லையாம். ஆனால் தன் கணவனின் வீரச்செயல்களைப்பற்றிக் கேட்டவுடன் அவள் ஆரோக்கியம் அடைந்துவிடுவாள். நமது அவையின் சார்பாக பண்டிதராவுக்கு நம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்வோம்' என்றார் அவர். பண்டிதராவ் மெதுவாக அளந்து பேசினார்: 'அரசருக்கு என் நன்றி. எல்லாம் அந்த மகாதேவன் கருணையும் மகாராஜா மற்றும் உங்களுடைய தயவும் ஆகும். இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் முராரி பிறந்ததற்குப் பிறகு இப்பொழுது தான் எங்கள் வீட்டில் ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. எனக்கு அதில் மகிழ்ச்சி. ஆனால் தாயின் உடல் நிலை திருப்தியாக இல்லை. அவள் என் தங்கை மகள் தான் என்பதும், என் வீட்டில் என் மகளைப் போலவே வளர்ந்தாள் என்பதும் உங்களுக்குத் தெரியும். அவள் நலம் பெறப் பிராத்திக்குமாறு உங்களை வேண்டிக்கொள்கிறேன். மகாதேவன் குழந்தையை ஆசீர்வதிப்பாராக!'

'அவ்வாறே ஆகுக; ததாஸ்து,' என்றார் பிரதம புரோகிதர் அமைதியான குரலில்.

'எனக்கு ஓர் எண்ணம். இன்று அதிகாலையில் கிடைத்த செய்தியின்படி முராரிராவ் கிளாவிருந்தபுரத்தில் தீரச்செயல் புரிந்துள்ளான். அதைப் பாராட்டும் முகமாக குழந்தைக்கு அந்தக் கிராமத்தின் பெயரையே சூட்டலாம் என்று நினைக்கிறோம். அவள் தந்தையின் அதிதீரத்தையும் சாதனையையும் நினைவுகூரும்படி நாம் அவளை **கிளாவிருந்தபாய்** என்றே அழைப்போம்,' என்றார் அரசர். 'நல்ல யோசனை' என்று அமைச்சர்கள் எல்லோரும் ஒரு முகமாகச் சொன்னார்கள். பண்டிதராவும் அரசர் கருத்தை நன்றியுடன் ஏற்றுக்கொண்டார்.

சேனாபதி மங்கோஜிக்கு இதற்கு மேலும் பொறுத்திருக்க முடியவில்லை. தாங்களும் மகிழ்ச்சியில் கலந்துகொள்ளுமாறு போர்க்களத்துச் செய்தியைத் தங்களுக்கும் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

'அதற்காகத்தான் இந்த ஆலோசகர் சபையைக் கூட்டு வித்ததே. செய்தியைச் சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்! இராமநாதபுரம் தளவாய் பெரும்படையைப் பின்னால் விட்டு விட்டு. இருபதுபேர் துணையுடன் கிளாவிருந்தபுரத்தில் இராத்தங்கியிருக்கிறார். இந்தச் செய்தி கிடைத்தவுடன் இருநாறு ஆட்களை மாத்திரம் தம்முடன் கூட்டிக்கொண்டு, இரவோடிரவாகப் பதினைந்து மைல் நடந்து தளவாயைத் திடீரென்று தாக்கிவிட்டார் நமது தளபதி முராரிராவ். இடீர்த் தாக்குதலால் திகைத்த தளவாய் நிபந்தனையின்றி நமது தளபதியிடம் சரணடைந்து விட்டார். இந்தப் படையெடுப்பைப் பற்றி நமது மந்திரிகளுக்கு வலுத்த சந்தேகம் இருந்தது. இத்தனை துரிதமாகவும் வெற்றிகரமாகவும் முடிந்ததில் அவர்கள் மகிழ்ச்சியடைவார்கள் என்பதில் ஐயமில்லை. முராரிராவும் தமது தந்தையின் நம்பிக்கை வீண் போகாமல் நடந்துகொண்டு விட்டார்,' என்றார் அரசர் மகிழ்ச்சியுடன். கூடியிருந்த சபை சந்தோஷ மிகுதியில் ஆரவாரம் செய்தது.

'சந்தோஷமான செய்திதான்,' என்றார் பிரதம மந்திரி. மங்கோஜி ஆர்வத்துடன், 'முக்கியப் படை இப்போது தளபதி முராரிராவோடு சேர்ந்துவிட்டதா?' என்று கேட்டார்.

இன்னும் இல்லை. அவர்களை வீணாக அலைப்பானேன் என்று அறந்தாங்கியிலேயே நிறுத்திவிட்டான் முராரிராவ். தளவாயைக் கைதுசெய்து கொண்டு அவனே இந்நேரம் முக்கியப் படையைச் சேர்ந்திருப்பான். கிளாவிருந்தபுரத்தை விட்டுப் புறப்பட்டுவிட்டதாக இரண்டு மணி நேரத்திற்கு முன்பே செய்தி வந்துள்ளது ,' என்றார் பண்டிதராவ்.

'முராரி கிளாவிருந்தபுரத்திலிருந்து புறப்படுமுன் வீரமறவரின் முக்கியப் படை அங்கு வந்திருந்தால் என்ன ஆகும்? அல்லது அவர் அறந்தாங்கிக்குத் திரும்பும் வழியில் அவரைத் தாக்கவும் வழி இருக்கிறது. தளபதியின் சமயோசிதத்தைச் சந்தேகப்படுவதாகப் பொருள் கொள்ளக்கூடாது. ஆனால் தளவாய் அஞ்சாத வீரர். அநுபவஸ்தர். இவ்வளவு எளிதில் பொறியில் விழக்கூடியவரல்ல என்பது நம்மனைவருக்கும் தெரியும்–' பொடி வைத்துப் பேசினார் சேனாபதி.

'சண்டையில் வெற்றிபெறும் பொருட்டுக் கோவிலில் பலி பூஜைபோடுவதற்காகத்தான் தளபதிகிளாவிருந்தபுரம்போயிருப்பதாக முராரிக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. முராரியின் தாக்குதல் உண்மையாகவே சற்றும் எதிர்பாராதது என்று சொல்லலாம். தளவாயைப் பரிவாரத்தோடு ஒருவன் கூடத் தப்பமுடியாதபடி நன்றாகச் சூழ்ந்து கொண்டார்கள். அந்த வேளையில் தளவாயின் முக்கியப் படை முப்பது மைல்களுக்கு அப்பால் இருந்ததாக நமது ஒற்றர்கள் சொல்லுகின்றனர். அவர்களுக்குச் செய்தி எட்டும் முன்பு தளவாயைப் பத்திரமாக அறந்தாங்கிக்குக் கொண்டுவந்து

சேர்த்திருப்பார்கள் என்று நினைக்கிறேன்,' என்றார் பண்டிதராவ்.

ஆனால் தளவாய் பெரிய தந்திரசாலி என்று கேள்விப்பட்டிருக்கிறேன். தீங்கு ஏதும் நேரிடாது என்று நம்புகிறேன், என்றார் சேனாபதி. பண்டிதராவ் அவசரமாக மறுமொழி சொன்னார்:' தீங்கு நேரிடுமென்று பயப்படுவதற்கு இடமேயில்லை. சபை கலைவதற்கு முன்னால் முடிவான செய்தி வந்துவிடலாம் என்று எதிர்பார்க்கிறேன். முராரியைப் படைத்தலைவனாக நியமித்த போதே சேனாபதிக்கு ஐயம் தான். ஆனால் அந்தச் சந்தேகம் ஆதாரமற்றது என்று இப்போது தெரிந்து விடும். சரி, தற்போதைய பிரச்னைக்கு வருவோம். பிடிவாதமும் தொந் தரவும் பிடித்த வீரர் மறவர்களை எப்படிச் சமாளிப்பது என்பதைப் பற்றித்தான் யோசிக்கவேண்டியிருக்கிறது. பாம்பற்றுக்கு வடக்கே பட்டுக்கோட்டையில் நமது பிராந்தியத்தை அவர்கள் ஆக்கிரமித்துக்கொண்டு முள்ளாக உறுத்தி வருகின்றனர். தளவாய்தான் இப்போது அவர்களின் பலம். அவரைப் பிடித்துவிட்டதால் மேலே செய்யவேண்டிய காரியங்களைக் கவனிக்கவேண்டும்.'

'முதலில் பறவை நமது கையில் சிக்கட்டும்,' என்றார் சேனாபதி வறட்சியான குரலில்.

ஆமாம், அதுதான் 'நல்லது,' என்றார் பிரதானும். அதனால் ஒன்றும் அதிகத் தாமதம் ஆகிவிடாது. தளவாய் இன்னும் இரண்டு மூன்று நாட்களில் வந்துவிட்டால் சேதுபதி சார்பாக அவர் என்ன சொல்லுகிறார் என்பதை அவரிடமே நேரடியாகக் கேட்டுக்கொள்ளலாமே!' என்றார் பிரதான். பண்டிதராவ் பொறுமை இழந்தவராகச் சொல்லலானார்: நாம் தாமதிக்க வேண்டிய தேவையேயில்லை. தளவாயிடம் கலந்து கொள்வதும் அவசியமில்லை. நாம் கட்டளையிட, அவர் கீழ்ப்படிய வேண்டியது தான். இப்போதைய சேதுபதி அவர் கைப்பொம்மை. ஏறத்தாழ அறுபது ஆண்டுகளுக்கு முன் நாம் பட்டுக்கோட்டைப் பிராந்தியத்தை வென்று கைப்பற்றினோம். நடுவில் சிலகாலம் அதை வீரமறவர் ஆக்கிரமித் இருந்தாலும், பதினாறு வருடங்களுக்கு முன் முடிவாக பாம்பனாற்றின் வடபகுதி நமது இராஜ்யத்தோடு இணைக்கப்பட்டு விட்டது. அப்போது குட்டத்தேவர் காலத்தில் வீரமறவர் நாடும் ஒழுங்குபடுத்தப்பட்டது. ஆனால் அவர் காலத்துக்குப் பின் தளவாய் மிகக் கவனமாக வருமானத்தை அதிகரித்து படைப் பயிற்சியும் அளித்து வந்திருக்கிறார். நம்முடைய அரசோடு அவரது உறவு எப்போதும் பகையாக இருந்து வந்திருக்கிறது. நமக்கு விரோதமாக நவாபைத் தூண்டியது மல்லாமல் உதவியும் செய்தார். மதுரை இளவரசனுக்கு உதவுமாறு நாம் கேட்டபோதும் மறுத்து விட்டார். அதன் விளைவாக, பழம்பெரும் பாண்டிய மன்னரின் வாரிசான வங்காரு திருமலை நாயக்கர், நவாபின் சமஸ்தானத்தில் மாதாந்திரப் பிச்சையாக ஏதோ வாங்கிக்கொண்டு அவரைச் சார்ந்த அற்பதொழும் பனைப்போல் வாழ்க்கை நடத்திவர நேரிட்டு விட்டது. நிலக்கோட்டையிலும், தொண்டைமானிலும் சின்ன மறவர்களிடம் நமக்கு இருக்கும் உறவையும் கெடுத்து வருகிறார். இதெல்லாம் போதாதென்று இப்போது பாம்பனாற்றின் வடக்கில் நமது பகுதியைத் திடீரெனத்தாக்கி ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறார். முடிவாக என்னுடைய ஆலோசனை இது தான் : ஒன்று இந்தத் துரோகியை மரணத் திற்குட்படுத்தவேண்டும் அல்லது தலை நகரில் கடுஞ்சிறையில் வைக்கவேண்டும். சேதுபதிக்குச் சரிவர நாட்டை ஆளும் திறமை இல்லாததால் அவரைப் பெயருக்குத் தலைவராக்கி அரசாட்சி செய்வதற்கு நமது அதிகாரி ஒருவரை அங்கு அனுப்பவேண்டும். 'சேதுபதிக்கு இதுவே அதிகம்,' என்று அரசரும் பண்டிதரின் பேச்சை ஆதரித்தார். 'நமது பிரதான்ஜியின் எண்ணம் என்னவோ?' என்று கேட்டார்.

பிரதானர் மிகவும் ஜாக்கிரதையாக, சேதுபதிக்கு இது வேண்டியது தான். ஆனால்–' என்று இழுத்தார். ''என்ன ஆனால்–'' என்றார் பண்டிதராவ் குறுக்கிட்டு. 'நாம் இந்த நடவடிக்கை எடுத்தால் நவாபும், பிரெஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும் என்ன செய்வார்கள் என்பதை நாம் கவனிக்கவேண்டும்' என்று மெதுவாகச் சொன்னார் பிரதான். 'நவாபுக்கும் பரங்கிகளுக்கும் இதில் என்ன வந்தது? வீரமறவர் நமது ஆதிக்கத்துக்குட்பட்டவர்கள். மானியக்காரன் தவறாக நடந்துகொண்டால் எஜமானுக்கு அவனைத் தண்டிக்க உரிமையுண்டு. நவாப் நம்மைக் கலந்துகொண்டா தமது பாளையக்காரரை நீக்கவோ தண்டிக்கவோ செய்கிறார்? அவருக்குக் கப்பம் கிடைத்துக் கொண்டிருக்கிற வரையில் சரி. நமது உள்நாட்டு விவகாரத்தில் அவர் தலையிடமாட்டார். பரங்கிகளுக்கும் இதில் தலையிட எவ்வித உரிமையும் கிடையாது. அவர்கள் வியாபார காரியமாக நமது நாட்டில் நுழைந்தால் கூட ஐந்து பணம் ஆள்வரி கட்டிவருகிறார்களே?' என்று பண்டிதராவ் காட்டமாகக் கூறினார்.

சேனாபதி சொன்னார்: 'சமீபத்தில் ஏற்பட்ட தொல்லைகளின் போதும், அரசர் பிராயாமடையாமல் இளையவராக இருந்த போதும் நவாப் நமது உள்நாட்டு விவகாரங்களில் எத்தனை அக்கறை காட்டி வந்தார் என்பதை பண்டிதராவ் அறியாதவர் அல்ல. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அவர் தான் நமது மண்டலாதிபதி. நாமும் ஆண்டுதோறும் கப்பம் செலுத்தி வருகிறோம். இதற்கு முன் அரியணையில் வீற்றிருந்தவர், அரசுரிமை உள்ளவர் அல்ல. ஆயினும் அரசராகி விட்டார். அவரை அரசர் என்று பாராமல் நவாபின் வேலையாள் அவரைப் பட்டப்பகலில், இந்த மண்டபத்தில் துணிந்து, சலுகையுடன் குத்திக் கொல்லவில்லையா? நவாபின் உதவி என்று சொல்லாவிடினும் அவருடைய அனுமதியின் பேரில்தான் தாங்கள் இந்த அரசு கட்டில் ஏறினீர்கள் என்பதை மறந்துவிட முடியாது. சையத் செயீத் செல்வாக்கையும் மறந்துவிடுவதற்கில்லை. நமது நல்லகாலம் அவர் கொலையுண்டு போனார்.'

நவாபுக்கு சேதுபதி மீது பிரியம் அதிகம் என்பதைப் பண்டிதராவ் ஒப்புக்கொள்கிறார். அப்படியானால் தளபதி நமது கையில் சிக்கியிருக்கிறார் என்பதனால் நாம் சேதுபதி மீது எடுக்கும் இந்தத் திடீர் நடவடிக்கையை நவாப் ஒப்புக்கொள்வாரா?' என்று பிரதானர் கேட்டார். 'நமது அரசு நம்மைச் சிறுமைப்படுத்தும் பிறர் ஆதிக்கத்தை அறவே ஒழித்துவிட்டுத் தன் பழைய சுதந்திரத்தை மீண்டும் நிலைநாட்டிக்கொள்ள வேண்டும். நவாப் இதில் தலையிட முயற்சி செய்வார் என்பதை நான் அறிவேன். ஆனால் அவரை எதிர்ப்பதற்கு உரிய வலிமை இப்போது நம்மிடம் உள்ளது என்றே நம்புகிறேன். இது அதற்கான நல்ல தருணமும் கூட, என்றார் பண்டிதராவ் மிக அழுத்தமாக.

நமது நியாயமான உரிமைகளை நிறைவேற்றுவதற்கு நாம் யாரிடமும் பயப்படவேண்டியதில்லை' என்று அரசர் ஒத்துப்பாடினார்.

'தளவாயை அவர் செய்த துரோகத்துக்காக நாம்

தண்டிக்கலாமென்றாலும் அவருடைய இடத்தில் வேறு ஒருவரை நியமிப்பது சேதுபதியின் உரிமையாகும். அதை நாம் ஏன் பறித்துக் கொள்ள வேண்டும்? அந்தப் பகுதியின் நிர்வாகத்தை நாம் எடுத்து நடத்தவேண்டிய அவசியம் என்ன?' என்று சேனாபதி வினவினார். மேலும் தொடர்ந்து, 'போரில் வெற்றிகொண்ட உரிமையால் மகாராஜா அவரது அதிபதி ஆகிறீர்கள். அது உண்மை தான். ஆனால் இராமநாதபுரத்து சேதுபதிகள் நாட்டின் அந்தப் பகுதியைப் பல நூற்றாண்டுகளாக ஆண்டு வருகிறார்கள். இந்த மராட்டிய அரசு நிறுவப்படுவதற்கு முன்னால், ஏன் அது கற்பனையில்கூட தோன்றுவதற்கு முன்னால் இருந்தே அவர்கள் அங்கே ஆட்சி செலுத்தி வந்திருக்கிறார்கள். நாம் அதை மறந்துவிடுவது நீதியாகாது,' என்றார். அரசர் மௌனமாகப் பண்டிதராவை நோக்கினார். 'நீதியையும் தர்மத்தையும் நிலைநாட்ட சேனாபதி முன் வந்திருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது,' என்றார் பண்டிதராவ் கேலிக்குரலில். தொடர்ந்து:

'நாட்டுப்பற்று சிறிதும் இல்லாமல் துணிந்து இந்தச் சமூகத்தில் இப்படிப் பேசுவதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. சேனாபதி கூறும் பிரச்னையை நான் சிந்திக்காதவன் அல்ல. தீரஆலோசித்த பின் தான் அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். ஏனென்றால் இப்போதைய சேதுபதியின் இயல்பையும் கருத்தில் கொள்ளவேண்டும். அவரை அரசாள அனுமதித்தால் அது முடிவில்லாத சூழ்ச்சிகளுக்கும் தொல்லைகளுக்கும் இடம் தரும். வீரமறவர் குறுநிலம் ஒரு தனிப்பட்ட ஆட்சியாகவே இயங்கிவரும். அதைப்பற்றிப் பயப்படவேண்டிய தேவை இல்லை. சேதுபதி சரிவர நிர்வகிக்கும் சக்தி பெறும் வரை மகாராஜா நியமிக்கும் அதிகாரி அங்கு ஆட்சி செய்வார். அவர் மகாராஜாவுக்கு நேரடியாக உத்தரவாத முள்ளவராக இருப்பார். இப்படிச் செய்வதன் மூலம் நாம் நமது அதிகார உரிமையை நிலைநாட்டிக் கொள்ளலாம். அதுமட்டுமில்லாமல், எதிர்காலத்தில் நமது மானியக்காரர்களுடன் நாம் எடுக்கப்போகும் நடவடிக்கைகளுக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகவும் அமையும்,' என்றார்.

'காற்று எந்தத் திசையில் அடிக்கிறது என்று இப்போது தெரிகிறது' என்று சேனாபதி தனக்குள் முணுமுணுத்தார். இராஜப்பிரதிநிதி யார் என்பதையும் என்னால் ஊகிக்க முடிகிறது. வென்றவன் அல்லாமல் வேறு யார் நாட்டை அரசாளுவான்? ஆனால் முதலில் அவன் தளவாயைப் பிடித்துக்கொண்டு வரட்டும் பார்ப்போம்,' என்று நினைத்துக் கொண்டார்.

அரசர் அரியணையில் அமர்ந்ததும் அகன்று விட்ட கட்டியக்காரன் இப்போது திரும்பி வந்து அமாத்யாவின் காதில் ஏதோ கிசுகிசுத்தான். அமாத்யா உடனே போர்க்களத்திலிருந்து இன்னொரு தூதன் வந்திருப்பதாகவும், அரச சமுகத்துக்குக் காத்திருப்பதாகவும் தெரிவித்தார்.

'அப்படியா? அவனை உள்ளே அனுப்பு-' என்று கட்டளை யிட்டார் அரசர்.

**தொடரும்...**

## வரலாற்று செய்தி

கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோவிலில் வரலாற்று சங்க சுற்றுப்பயணத்தின் பொழுது திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் உறுப்பினர்களும் மற்றும் ஸ்காட் கிறிஸ்துவக் கல்லூரி பேராசிரியர்களை சந்தித்தோம் அவர்களிடம் வரலாற்றுச் சுவடுகள் மாத இதழை கொடுத்த பொழுது எடுத்தப் படம்.







கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோவிலில் வரலாற்று சங்க சுற்றுப்பயணத்தின் பொழுது திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் உறுப்பினர் டாக்டர் சாம்ராஜ் அவர்களை சந்தித்தோம், அவர்களிடம் வரலாற்றுச் சுவடுகள் மாத இதழை கொடுத்த பொழுது எடுத்தப் படம்.

## சேலம் சீர்திருத்த திருச்சபைகளில்

# இந்திய குருமார்களின் பங்கும் பணியும்

ஜே.பர்னபாஸ், சேலம்

**சங்கை சார்லஸ் முத்து ஐயர் (1875-1892 )**

இந்திய தொழிற்கல்வியின் தந்தை சங்கை J.M.லெக்லர் ஐயரின் மருமகனான பன்மொழிப்புலவர் சங்கை டாக்டர் மோரிஸ் பிலிப்ஸ் ஐயர் (1869-1910) அவர்கள் சேலம் லண்டன் மிஷன் மிஷனெரி நிர்வாகியாக பொறுப்பேற்றதும் திருச்சபையின் வளர்ச்சியை நோக்கிய நடவடிக்கைகளை எடுத்தார். அதன் முதல் முயற்சியாக திருச்சபை ஊழியத்தில் தனக்கு உதவியாக இருந்த உபதேசியார்களில் அனுபவமும் முதிர்ச்சியும் பெற்ற மூவரை தன்னுடன் இணைந்து பணியாற்றும்படியாக குருவானவர்களாக அருள்பொழிவு கொடுத்து திருப்பத்தூர், சேலம், மற்றும் நாமக்கல் பகுதிகளில் நியமித்தார். சேலத்தில் சங்கை சார்லஸ் முத்து ஐயர் அவர்கள் முதல் இந்திய குருவானவராக பொறுப்பேற்றார். இப்படி இந்தியர்களைகுருவானவர்களாகநியமித்தஅவரதுநடவடிக்கையை அன்றைய திருச்சபையில் எதிர்த்தவர்கள் பலர், இதனால் பலர் திருச்சபையைவிட்டு வெளியேறவும் இது காரணமானது. இதனால் திருச்சபையாரை தன்வழியில் திருப்பவும், நம்பிக்கையுடன் தனது வளர்ச்சி பாதையிலான நடவடிக்கைகளுக்கு ஒத்துழைப்பு நல்கவும் அவர் திருச்சபையாரை மிகவும் அன்புடன் கேட்டுக்கொண்டார்.

இப்படியான ஒரு மாபெரும் மாற்றம் இந்தியர்களிடம் திருச்சபையை வழி நடத்தும் ஒரு உன்னத பொறுப்பு தொலைநோக்கு பார்வையுடன் அது அன்றே வழங்கப்பட்டது. கி.பி.1875 ஆம் ஆண்டு இவ்வாறு சேலம் பகுதிகளின் முதல் இந்திய குருவானவராக சங்கை சார்லஸ் முத்து ஐயர் நியமிக்கப்பட்டது சேலம் லண்டன் மிஷன் திருச்சபை வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தின் துவக்கம் என்றே சொல்லலாம். லெக்லர் ஞாபகார்த்த ஆலய 138 ஆண்டின் சபை சரித்திரத்தை எழுதிய திரு.ஞானமுத்து அவர்கள் சங்கை சார்லஸ் முத்து ஐயரைப் பற்றி கூறும்போது: 'சேலம் சபை ஓரளவு அதன் பொறுப்பை ஏற்றுக் கொள்ளத்தக்க நிலையை அப்பொழுது அடைந்திருந்தது. சங்கை சார்லஸ் முத்து சுவிசேஷகராக, உபதேசியாராக, பணிசெய்து வந்த காலத்தில், சேலம் லண்டன் மிஷன் சபையின் மிஷனெரி நிர்வாகிக்கு உதவி குருவாக கி.பி.1875 ஆம் ஆண்டு அபிஷேகம் செய்யப்பட்டார். திருச்சபை இவரை தனது போதகராக தெரிந்து கொண்டதில் பெருமை கொண்டது. அந்த காலங்களில் சேலம் பகுதிகளில் சங்கை சார்லஸ் முத்து ஐயர் அவர்களே முதல் இந்திய போதகராக மிகத் திறமையோடு ஊழியம் செய்தவர்; மிக சாதுரியமான பிரசங்கி, தேவனுக்கு பயந்து பாவத்தை கண்டித்து, சபையாரால் நற்சாட்சி பெற்ற தகுதி வாய்ந்த போதகர். இவர் சேலம் திருச்சபையில் 27 ஆண்டுகள் போதக ஊழியம் செய்தார்கள்.' என்று குறிப்பிட்டுள்ளார்.

**சங்கை A. டிக்னம் ஐயர் (1885-1906)**

'சேலம் திருச்சபை இவரால் பெருமை பெற்றது என்றே சொல்ல வேண்டும்; எளிமையான நிலைமையிலிருந்து சேலம் திருச்சபையில் மிக உயர்வான நிலைக்கு தன்னை உயர்த்தி கொண்டவர் இவர். தமிழ் இலக்கியத்தில் பாண்டித்தியம் பெற்றிருந்த இவர், திருக்குறள், தாயுமானவர் பாடல்கள், முதலியவற்றிலிருந்து மேற்கோள்களை எடுத்து தனது சுவிசேஷ பிரசங்கங்களில் பயன்படுத்துவார். கேட்பவர்களை பிணைக்கும் வாக்கு சாதுரியம் கொண்டவரான இவர் கடவுளுக்கு பயந்து, தீமைக்கு விலகி நின்றதோடல்லாமல், தன்னைப் போலவே அனைவரும் கிறிஸ்துவை பின்பற்ற, போதித்து வழிநடத்தியவர்.' என்று குறிப்பிடுகிறார்.

உயர்நிலைப் பள்ளி ஆசிரியராக, சுவிசேஷகராக, உபதேசியாராக, இறுதியில் குருவானவராக சேலம் மிஷனில் ஏறத்தாழ 30 ஆண்டுகள் சிறப்பான சேவையின் முடிவில் 1892 ஆண்டு சங்கை சார்லஸ் முத்து ஐயர் இறைபாதம் சேர்ந்தார்.

**சங்கை சக்கரியா ராஸ் ஐயர் (1893-1912)**

சேலம் லண்டன் மிஷன் திருச்சபையின் இரண்டாவது இந்திய குருவானவராக சங்கை சக்கரியா ராஸ் ஐயர் 1893 ஆம் ஆண்டு பொறுப்பேற்றார். சேலம் லண்டன் மிஷன் மிஷனெரி நிர்வாகிக்கு உதவி குருவானவராகவும், அதே சமயம் அப்பொழுது சேலத்தில் துவக்கப்பட்ட சேலம் லெக்லர் நினைவு வேதசாஸ்திர கல்லூரியின் வேத சாஸ்திர பேராசிரியராகவும், பணி செய்துவந்தார்.




சங்கை ராஸ் ஐயர் மிகவும் அமைதியானவர்; சபைகளுக்குள்ளும், இடையேயும் நிலவிவந்த சபை அரசியலில் தலையிடாமல் தன்னைக் காத்துக் கொண்டவர். சேலத்தில் அப்பொழுது மிஷன் நிர்வாகியாக இருந்த சங்கை வில்லியம் இராபின்சன் ஐயர் (1884-1909) காலத்தில் அவருடைய அஸ்தம்பட்டி மிசியோன் பங்களா (தற்போதைய CSI பல்தொழில் நுட்ப கல்லூரி அமைந்துள்ள இடம்) வளாகத்தில் சங்கை J.M.லெக்லர் நினைவு வேதசாஸ்திர கல்லூரி துவக்கப்பட்டது. அதனை சங்கை லெக்லர் ஐயரின் மனைவி திருமதி.அண்ணி ரோசா லெக்லர் அம்மையார் துவக்கி வைத்தார்கள். அந்த கல்லூரியின் முதல்வராக சங்கை இராபின்சன் ஐயரும், பேராசிரியராக சங்கை ராஸ் ஐயரும் பொறுப்பேற்றுக்கொண்டார்கள். மிஷனெரி நிர்வாகி பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருக்க, கல்லூரியின் மொத்த நிர்வாக அலுவல்களும், வகுப்புகளின் நடப்புகளும், சங்கை ராஸ் ஐயர்

பொறுப்பிலேயே நடந்து வந்தது. சங்கை ராஸ் ஐயர் ஒரு சிறந்த பிரசங்கியார், சபை மக்களை சந்திப்பதில் ஆர்வம் கொண்டவராகவும் அவர் விளங்கினார். பல்வேறு பணிகளையும் சிறப்புடன் ஒருங்கிணைத்து கவனித்து நடத்தி வந்தார். சங்கை ராஸ் ஐயர் தனது 72ஆவது வயதில் சேலத்தில் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார்.




**இராவ் சாகேப் சங்கை மனுவேல் ஏசடியான் ஐயர் (1856-1928)**

சுத்த சுவிசேஷ பிரபல்ய சங்க (Society for the Propagation of Gospel S.P.G.) திருச்சபையின் குருவானவராக செகண்ட்ராபாத், வேலூர், சென்னை, பெங்களூரு, சேலம், போன்ற நகரங்களில் 45ஆண்டுகளுக்கும் மேலாக இறைபணியும், சமுதாயப் பணியும் செய்தவர். இவரது இறைபணி, மற்றும் சமுதாயப் பணிகளைப் பாராட்டி அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் இவருக்கு உயரிய விருதான 'இராவ் சாகேப்' என்ற விருதைக் கொடுத்து இவரை கௌரவித்தது. இந்த விருது தற்காலத்தில் இந்திய அரசு வழங்கிவரும் பத்மஸ்ரீ, பத்மபூஷண், போன்றது.

SPG திருச்சபையின் மத்திய மாமன்றத்தின் செயலாளராகவும் பல ஆண்டுகள் சிறப்பாக பணியாற்றிய இராவ் சாகேப் சங்கை ஏசடியான் ஐயர் சேலம் பகுதிகளில் பணியாற்றி வந்தபோது தனது 72 ஆம் வயதில் இறைவனடி சேர்ந்தார். இவரது கல்லறை சேலம் 4ரோடு பெரமனூர் சீர்திருத்த கிறிஸ்தவ கல்லறைத் தோட்டத்தில் கால வெள்ளத்தின் பல்வேறு பாதிப்புகளையும், மனிதர்களின் விஷமத்தனங்களையும், தாண்டி இன்றும் சாட்சியாக நிலைத்திருப்பது ஒரு அதிசயமே.

**முடிவுரை:**

சேலம் சீர்திருத்த திருச்சபைகளின் வரலாற்றிலும், சேலம் வரலாற்றிலும் முத்திரை பதித்த குருமார்களின் விவரம் சொல்லப் போனால் அது வளர்ந்து பெருகும். இப்படி எண்ணற்ற சாட்சிகள் வரலாற்றின் பக்கங்களில் நமக்கு முன்பாகச் சென்று நமக்கு பாதைகளை செம்மைப்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள். நாமும் அவர்களின் பாதச் சுவடுகளைப் பின்பற்றி, இனி நமக்கு பின்வரும் சந்ததியாருக்கு பாதைகளை செம்மைப் படுத்திக் கொடுப்போம்.

### திருச்சபை வளர்ச்சிக்கு அரும் பாடுபட்ட இந்தியரான

# எஸ்.பி.ஜி மற்றும் சி.எம்.எஸ் மிஷன் குருமார்கள்

**J. ஜான் ஞானராஜ் கல்லிடைக்குறிச்சி**

**எஸ். பி. ஜி மிஷன் குரு கனம். யோபு ஐயரவர்கள்**

நாசரேத் அருகிலுள்ள கடையனோடை கிராமத்தைச் சேர்ந்த ஆபிரகாம் உபதேசியாரின் மகனாக யோபு ஐயரவர்கள் பிறந்தார்கள். பள்ளிக் கல்வியையும் உபதேசியார் பயிற்சியையும் பெற்றிருந்த இவர் நாசரேத் தலைமை குருவானவராக இருந்த கனம்.கேமரர் ஐயர் அவர்களால் நாசரேத் உபதேசியார் ஆக 1850 அளவில் நியமிக்கப்பட்டார்கள். 1850 வரை நாசரேத் மற்றும் மூக்குப்பீறி ஆகிய இரு இடங்களிலும் உபதேசியார் ஆக எஸ். பி. ஜி மிஷனின் புகழ்வாய்ந்த உபதேசியார் என அழைக்கப்படும் நாசரேத் க.சுவாமியடியான் உபதேசியார் இருந்தார்கள். 1850 அளவில் மூக்குப்பீறி உபதேசியாராக மட்டும் பணி செய்யவும் சுவாமியடியான் உபதேசியாரின் மகள் செல்வத்தை திருமணம் செய்த யோபு உபதேசியார் நாசரேத்தில் சபை ஊழியராக நியமனம் பெற்றுள்ளதையும் அறிய முடிகிறது.

யோபு ஐயர் அவர்களின் மனைவி செல்வம் யோபு நாசரேத்தில் பிரதான முக்கந்தராகவும் நாசரேத் தேவாலய முதல் கோவில் குட்டியாராகவும் செயல்பட்ட கருப்பன் முக்கந்தர் அவர்களின் மகன் வழி பேத்தியாக சுவாமியடியான் உபதேசியாரின் மகளாக பிறந்த செல்வம் அம்மாளுடன் சேர்த்து அவரோடு உடன்பிறந்தவர்கள் ஏசுவடியான், ஆபிரகாம், செல்வம், மோசஸ், வேதமாணிக்கம், ஜான், சாலமோன், ஜோசப் என எட்டு பேர். தம் பிள்ளைகள் எட்டு பேரையும் சுவாமியடியான் உபதேசியார் தெய்வ பக்தியில் வளர்த்ததாக எஸ். பி. ஜி. மிஷன் ரிப்போர்ட்களில் மிஷனரிகள் குறிப்பிட்டுள்ளனர்.

**ஊழிய பணிகள்**

1852 வரை நாசரேத் சபை ஊழியராக இவர் பணி செய்தார். அதன்பின் கடையனோடையில் உபதேசியாராகப் பணி செய்தார். 1859 இல் இவர் அங்கு பணி செய்த போது குருத்துவ படிப்பு பயில தேர்வு செய்யப்பட்டு சென்னை வேதாகம கல்லூரிக்கு அனுப்பப்பட்டார்.

1862 இல் இவருக்கு உதவி குரு பட்டம் கொடுக்கப்பட்டது சாயர்புரத்தில் உதவி குருவாக நியமிக்கப்பட்டார். 1866 இல் யோபு ஐயரவர்களுக்கு சென்னை பேராயரால் பாளையங்கோட்டையில் குருபட்டம் கொடுக்கப்பட்டது. 1866 இல் யோபு ஐயரவர்கள் கிறிஸ்டியாநகரம் சேகர குருவாக நியமனம் பெற்று 1877 வரை மிகச் சிறப்பானதொரு ஊழியத்தை அவரும் அவரது துணைவியார் செல்வம் யோபு அவர்களும் செய்துவந்தனர். செல்வம் யோபு

அம்மையார் கிறிஸ்டியாநகரத்தின் பரிசுத்தவாட்டி என போற்றப்பட்டார்.

**கிறிஸ்டியாநகரத்தில் யோபு ஐயர் - செல்வம் யோபு அம்மாள் தம்பதியரின் நற்பணிகள்.**

யோபு ஐயரவர்கள் கிறிஸ்டியாநகரம் சபை மக்களின் வீடுகளை சந்தித்து ஜெபிப்பதில் மிகுந்த கவனமாக இருந்தார், சபை மக்களை ஆவிக்குரிய ஜெப ஜீவியத்திலும் ஓய்வு நாள் ஆசரிப்பிலும் மிகச்சிறப்பாய் வளர்த்து வந்தார் சபை மக்கள் ஒவ்வொருவரிடத்திலும் வேதாகமம் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியதோடு அதற்கான முயற்சிகளை இவர் எடுத்து நடைமுறைப்படுத்தினார்.

திருமதி. செல்வம் யோபு அவர்கள் சபைமக்கள் சுகவீனம் அடைந்தால் சுகவீனமானவர்களை நேரில் சந்தித்தல், ஜெபித்தல், மருத்துவ உதவி செய்தல் ஆகியவற்றில் அதிக விருப்பம் கொண்டவராக செயல்பட்டார். இவரது தந்தையான நாசரேத் சுவாமியடியான் உபதேசியார் போல வைத்திய அறிவும் இவருக்கு நன்கு இருந்தது. அந்த வைத்திய அறிவை சபை மக்களின் நலனுக்காக பயன்படுத்தினார். இவரது தாத்தா நாசரேத் கருப்பன் முக்கந்தரைப் போல ஆளுமைத் திறன் கொண்டவராக இவர் இருந்தார். கிறிஸ்டியாநகரம் ஊர் மக்களுக்குள் சண்டை, சச்சரவுகள் ஏற்படும் போது அவர்களுக்கு இடையே நின்று வழக்கு பேசி சமாதானம் செய்து வைப்பதில் செல்வம் யோபு அம்மாளுக்கு நிகர் யாரும் இல்லை எனக்கூறலாம். ஞானப்பாட்டுகளையும், கீர்த்தனைகளையும் வெகு நேர்த்தியாக பாடுபவராக செல்வம் யோபு அம்மாள் இருந்தது யோபு ஐயரவர்களுக்கு ஊழியத்தில் உறுதுணையாக இருந்தது.

**பணி மாற்றமும் சுகவீனமும்**

கிறிஸ்டியாநகரத்தில் சிறப்புற ஊழியத்தை செய்து வந்த யோபு ஐயரவர்கள் 1877 இல் தஞ்சாவூர் வேதியர்புரத்திற்கு குருவானவராக மாற்றப்பட்டார்கள். வேதியர்புரம் சென்று தமது பணியை சிறப்புற செய்ய தொடங்கிய சில ஆண்டுகளில் யோபு ஐயரவர்கள் சுகவீனம் அடையத் தொடங்கினார்கள்

**மரணமும் அற்புதங்களும்**

சுகவீனம் காரணமாக விடுப்பு பெற்று சொந்த ஊரான கடையனோடைக்கு வந்து தமது சொந்த வீட்டில் தங்கி சிகிச்சை பெற்று வந்த நிலையில் 18.01.1880 இல் யோபு ஐயரவர்கள் மரணமடைந்தார்கள் செல்வம் யோபு அம்மையார் 18.03.1888 இல் மரணமடைந்தார்கள் இருவரும் கடையனோடை மிஷன் கல்லறை தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் அங்கு கல்லறைகள் கட்டப்பட்டது. இருவரது மரண நேரங்களிலும் கடையனோடையைச் சார்ந்த சுவாமியடியான்நாடார், தாவீதுநாடார் ஆகியோர் உதவிகரமாய் இருந்துள்ளனர். 26.04.1994 இல் தாவீதின் மகன் வேதக்கண் இவ்விருவரின் கல்லறைகளையும் புதுப்பித்து கட்டியுள்ளார்.

## சி.எம்.எஸ் மிஷன் குரு கனம் ஈசாக்கு ஆபிரகாம் ஐயரவர்கள்

கனம். ஈசாக்கு ஐயரவர்கள் திருநெல்வேலி மாவட்டம் சீவலப்பேரியில் பிரமுத்து தேவரின் மகனாக 1829 இல் பிறந்தார்கள். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் நல்லகண்ணு இவருக்கு அழகப்பன் என்ற சகோதரரும் வெள்ளையம்மாள் என்ற சகோதரியும் இருந்தனர். ஏழாவது வயதிலேயே தாயாரை இழந்த நல்லகண்ணு சீவலப்பேரியில் இருந்த சி.எம்.எஸ். தேவாலயத்திற்கு ஞாயிற்றுக்கிழமைகளில் சென்று வந்தார். தந்தைக்கு தெரியாமல் சி.எம்.எஸ் பள்ளி சென்று படித்து வந்தார். இரவு நேரங்களில் பள்ளி ஆசிரியரிடம் சென்று தமிழ் கற்றுக்கொண்டார். நற்செய்தி நூல்களை போதகரிடம் வாங்கி வாசித்தார். சீவலப்பேரிக்கு நற்செய்தி அறிவித்து வந்த மிஷனரி டக்கர் ஐயரவர்களிடம் சீவலபேரி பள்ளி ஆசிரியர் நல்லகண்ணுவை அறிமுகம் செய்து வைத்தார். மிஷனரி டக்கர் நல்லகண்ணுவை தம்மோடு பண்ணைவிளைக்கு வருமாறு அழைப்பு விடுத்தார். நல்லக்கண்ணுவின் தந்தை பிரமுத்துதேவர் டக்கருடன் நல்லகண்ணு செல்ல எதிர்ப்பு தெரிவித்ததோடு 'வெள்ளைக்காரரோடு சென்றால் நீ அவருடைய பிள்ளை, இனி என் மகன் இல்லை, என் மகன் செத்து விட்டான் என நினைத்துக் கொள்வேன்?' எனக் கூறினார். ஆனாலும் ஆண்டவருடைய சித்தப்படி கனம்.டக்கரோடு 1845 இல் பண்ணைவிளைக்கு சென்ற நல்லகண்ணு அங்கேயே தங்கிக் கொண்டார்.

1845 நவம்பரில் நல்லகண்ணு ஈசாக்கு என்ற பெயரிலும் இரு மறவர் சமூகப் பெண்கள் ஞான வடிவு, ராகேல் என்ற பெயரிலும் கனம். டக்கரிடம் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டனர். 1850 இல் ஈசாக்கு உபதேசியார் அவர்களுக்கும் ராகேல் அம்மாளுக்கும் கனம். டக்கரால் திருமணம் நடத்தி வைக்கப்பட்டது.

**குருப்பட்டம் பெறுதலும் தந்தையின் மனமாற்றமும்**

ஈசாக்கு உபதேசியாரின் ஊழிய ஆர்வம், அருளுரை ஆற்றும் திறமையை கண்ட கனம்.டக்கர் அவரை குருத்துவ கல்வி பயில 1852 இல் பாளையங்கோட்டைக்கு அனுப்பி வைத்தார் அங்கு கனம். சார்ஜென்ட் ஐயரவர்களிடம் இரண்டரை ஆண்டு வேதாகமகல்வி பயின்ற அவர் தமிழ் வழியில் பயின்றாலும் கிரேக்கம், எபிரேயம், ஆங்கிலம் ஆகிய மொழிகளை சிறப்பாக கற்று தேர்ந்தார். ஈசாக்கு உபதேசியாருக்கு 1859 இல் பண்ணைவிளை தேவாலயத்தில் வைத்து சென்னை பேராயர் மூலம் உதவி குரு பட்டம் கொடுக்கப்பட்டது. தமது மகன் ஈசாக்கின் முன்மாதிரி வாழ்வை கண்டு அதிசயப்பட்ட தந்தை பிரமுத்து தேவர் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டார் ஆபிரகாம் என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்றார் அது முதல் ஈசாக்கு ஆபிரகாம் என்ற பெயரை பெற்றார்.

**கனம். ஈசாக்கு ஆபிரகாம் ஐயரவர்களின் ஊழியங்களும் நற்குணங்களும்**

**மருத்துவப் பணி**

அக்காலங்களில் காலரா, வாந்தி பேதி போன்ற நோய்கள் கடுமையாக மக்களைத் தாக்கி வந்தது அந்நேரம் எந்த ஊரில் மக்கள் பாதிக்கப்பட்டாலும் அந்த ஊருக்கு சென்று உதவி செய்வதில் ஈசாக்கு ஐயரவர்களுக்கு நிகர் எவருமில்லை.

**பசிப்பிணி நீக்கும் பணி**

சமயம் கிடைக்கும் போதெல்லாம் ஏழை எளிய மக்கள் வீடுகளுக்கு சென்று அவர்கள் உணவு சாப்பிட்டார்களா? உணவு சமைத்தார்களா? என்பதை விசாரித்து தமது வீட்டிற்கு அழைத்து வந்து அவர்களுக்கு உணவளித்து ஆதரித்து வந்தார்.

**சமாதானம் செய்யும் பணி**

தினமும் பகல் வேளைகளில் அவருடைய வீட்டின் முன்பாக அல்லது பெரிய தேவாலயத்தின் முன்பாக மக்கள் கூட்டம் எப்போதும் இருக்கும். இருதரப்பு வழக்கு வாதங்ககளையும் கேட்டு நேர்மையுடன் பாரபட்சமில்லாமல் நீதியான தீர்ப்பை ஈசாக்கு ஐயரவர்கள் வழங்கி வந்தார்கள்.

**சகோதர அன்பு**

கனம் ஈசாக்கு ஐயரவர்களின் சகோதரர் மூன்று பிள்ளைகளை விட்டுவிட்டு சீக்கிரத்தில் மரித்துப்போனார். அந்த மூன்று பிள்ளைகளையும் தமது பிள்ளைகளாகக் கருதி அவர்களை வளர்த்து அவர்களுக்கு திருமணம் செய்து வைத்தது ஐயரவர்களின் சகோதர அன்புக்கு சிறந்த எடுத்துக்காட்டு. அனாதை, பிள்ளைகளுக்கு நல் வாழ்வு தந்த உத்தமர் அனாதை ஆண், பெண் பிள்ளைகளுக்கு தனது வீட்டிலேயே வைத்து அனைத்து செலவுகளையும் தாமே செய்து தமது வீட்டு திருமணம் போல நடத்துவதில் ஈசாக்கு ஐயரவர்களை யாரும் மிஞ்ச முடியாது. 27 அனாதை பிள்ளைகளுக்கு தமது செலவில் திருமணத்தை இவர் நடத்தி வைத்துள்ளார்.

**எளிமையின் இலக்கணம்**

கனம் ஈசாக்கு ஐயரவர்கள் தன் வாழ்நாளில் கூரை வீட்டிலேயே குடியிருந்தார் கனம் டக்கர் அவருடைய வீட்டிற்கு ஓடு போட்டு தர முன்வந்தபோது அதை ஏற்க மறுத்து விட்டார். 50 ஆண்டுகளாக அவர் உபயோகித்து வந்த வீட்டில் இருந்த அவருடைய சிறு அறையில் ஒரு மேசை, ஒரு கட்டில், இரண்டு நாற்காலி, சிறிய பெஞ்ச், இரண்டு சுவர்ப்படங்கள் தலைப்பாகை மற்றும் துணிகளை போட ஒரு கொடி ஆகியவை மட்டுமே இருந்தன.

**துன்பங்களை சகிப்பதில் சிறந்த முன்மாதிரி**

ஈசாக்கு ஐயரவர்கள் இளம் வயதில் வயிற்றுப்போக்குக்காக உட்கொண்ட மருந்தினால் ஏற்பட்ட அலர்ஜி காரணமாக அவருக்கு நரம்புகளில் பலவீனம் ஏற்பட்டது. அதன் காரணமாக நடுக்குவாதம் எனும் நோய் ஏற்பட்டது. நோய் நீங்கும் படியாக அவர் மிக ஊக்கமாக ஜெபித்து வந்தார். ஆனாலும் அந்த நோய் அவரது உடலில் ஆண்டவர் அனுமதித்த முள் ஆகவே அவரது ஆயுள் முழுவதும் தொடர்ந்தது. ஈசாக்கு ஐயரவர்களின் மூத்த மகள் செல்லம்மாள் நீண்டநாள் சுகவீனமாக இருந்து மரித்துப் போனார், மூன்றாவது மகன் இராக்லந்த் யோசேப்பு தனது 23 ஆம் வயதில் மரணம் அடைந்தார். இந்த இழப்புகளால் ஐயரவர்கள் பாதிக்கப்பட்டாலும் கர்த்தர் கொடுத்தார் கர்த்தர் எடுத்தார் கர்த்தருடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம் என சொல்லி ஜெபித்து தன்னைத் தேற்றிக் கொண்டார்.

05.04.1896 இல் கைலாசபுரம் குருவானவருக்கு பதிலாக அந்த கிராமத்தில் ஆராதனை நடத்தி விட்டு சங்க காணிக்கை பெற்றுக்கொண்டு வருவதற்காக 35 கிலோ மீட்டர் தூரம் நடந்தே சென்று திரும்பிய போது தலைவலியுடன் கண்களில் நீர் ஒட்டம் உண்டாகி இரண்டு கண்களிலும் பாசி படர்ந்தது, கண்களில் ஏற்பட்ட இக்கோளாறை சரிசெய்ய கனம்.வாக்கர் ஐயரவர்கள் பண உதவி செய்து பாளையங்கோட்டைக்கு மூத்த மகனுடன் அவரை அழைத்துவரச் செய்து சென்னைக்கு அனுப்பினார்கள். டாக்டர்.போப் அவர்கள் சிகிச்சை அளித்த போதும் அந்த சிகிச்சை பலனளிக்காமல் ஊர் திரும்பினார்கள். இதன் காரணமாக அவர் தமது 70 ஆவது வயதில் கண் பார்வையை இழந்தார். ஐயரவர்களின் இந்த நிலைமையை அறிந்த சி.எம்.எஸ் சங்கம் கனம். ஆசீர்வாதம் ஐயரவர்களை உதவி செய்யும்படி பண்ணைவிளைக்கு அனுப்பினார்கள், கண்பார்வை இழந்த போதும் பண்ணைவிளை தேவாலயத்தில் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் தவறாமல் ஜெபத்தில் அய்யரவர்கள் கலந்து கொண்டார்கள். கண் பார்வை இழந்த நிலையில் 6 ஆண்டுகளில் 64 ஞாயிறு ஆராதனைகளில் ஐயரவர்கள் சிறப்பாக பிரசங்கம் செய்தார்கள்.

**மரணமும் பாரம்பரிய செய்தியும்**

கண்பார்வை இழந்த நிலையிலும் 25.12.1903 கிறிஸ்மஸ் ஆராதனையை ஐயரவர்களே நடத்தினார்கள். ஆவியானவரின் பலத்தோடு சிறப்பாக அருளுரை ஆற்றினார்கள். இரவு 12 மணியளவில் தமது ஆவி தம்மை விட்டு எடுத்துக் கொள்ளப்படுவதாக ஓர் கனவைக் கண்டு ஐயரவர்கள் திடுக்கிட்டு எழுந்து தனது மனைவியிடம் தமது ஆவி எடுத்துக்கொள்ளப்பட போகிற காரியங்களை பகிர்ந்து கொண்டார்கள்.



10.03.1904 அன்று பண்ணைவிளை தேவாலயத்தில் காலை ஆராதனையில் சங்கீதம் 22 : 1 ஐ பகிர்ந்து கொண்டார்கள். ஞாயிறு காலையில் எழுந்து வேத தியானம் செய்து ஜெபித்து குளித்த ஐயரவர்கள் சோர்வு காரணமாக தேவாலயத்திற்கு செல்ல இயலாமல் இருந்தார்கள். தமது மனைவியை அழைத்து அன்றைய தினத்தில் ஒய்வு நாள் பள்ளிக்கு தன்னை அழைத்துச் செல்லும்படி கேட்டுக்கொண்டார்கள். அன்று இரவு 10 மணிக்கு ஜெபித்து படுத்துகொண்டார்கள். அன்று இரவு 12 மணி அளவில் ஐயரவர்கள் மனைவிக்கு ஐயரவர்களைப் பார்க்கும் பொழுது அவரது உடலில் மரண அறிகுறிகள் தென்படலாயின அந்நேரமே ஐயரவர்கள் மரணமடைந்தார்கள். மறுநாள் மாலை ஐந்தரை மணியளவில் ஐயர்வர்களின் உடல் பண்ணைவிளை தேவாலயத்திற்கு எடுத்துச்செல்லப்பட்டு அடக்க ஆராதனை ஜெபம் நடத்தப்பட்டு தேவாலயத்தின் வடமேற்கு சுவர் ஓரத்தில் தோண்டப்பட்ட கல்லறையில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

கனம். ஈசாக்கு ஐயரவர்களின் கல்லறையில் ஜெபிக்கிற வழக்கம் அப்பகுதியில் காணப்படுகிறது. சாயர்புரம், பண்ணைவிளை, பெருங்குளம் வட்டாரத்தில் உள்ள மக்கள் அனைவருமே சாதி, மத வேறுபாடின்றி ஏதாவது ஒரு கருத்து மோதல் ஏற்பட்டால் ஈசாக்கு அய்யர்வாள் கல்லறை முன் சத்தியம் செய்ய தயாரா? என கேட்பது ஒரு வழக்கமாக இன்றளவும் உள்ளது பொய் சத்தியம் செய்தால் உடனடியாக அது பலித்துவிடும் என்ற காரணத்திற்காக அந்த இடத்தில் உண்மையை அவர்கள் சொல்லிவிடுவது வழக்கம்.

# அருள்திரு. A.D. ஞானையா அவர்கள் ஊழியமும் சுருக்க வரலாறும்

**அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்**

Rev.A.D. ஞானையா அவர்கள் 1892ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 18 ம் தேதி திரு. சின்ன ஆபிரகாம் நற்செய்தி பணியாளருக்கும் திருமதி. நல்லமுத்து அம்மாளுக்கும் முதல் புதல்வராகப் பிறந்தார். அவருக்கு ஓர் இளைய சகோதரன் RevA.S தங்கையா அவர்களும் ஓர் சகோதரி அன்னபூரணம் அம்மாளும் உண்டு. சகோதரர் இருவரும் சிறுவயது முதல் வாழ்க்கையின் கடைசி மட்டும் ஒருவருக்கொருவர் அதிக பாசம் கொண்டவராய் இருந்தனர். பதினாலு வயதிலே தன் தந்தை இழந்ததால் தன் சகோதரனையும், சகோதரியையும், தாயையும் அன்பாய் நேசித்துப் பராமரித்து வந்தார்.

தன் தகப்பனாரோடு சேர்ந்து நற்செய்திப் பணி செய்யும் போது மெய்ஞானபுரத்திற்குக் கிழக்கேயுள்ள மாநாடு என்ற கிராமத்தில் கல்லெறியுண்டதால் நெற்றியில் ஓர் தழும்பு உண்டு. தகப்பனாருடைய பொருத்தனையின்படி வெளிநாடு சென்று வேலை செய்யாமல் திருச்சபைக்குள்ளேயே பணிவிடைசெய்யக் கீழ்ப்படிந்தார்.

கனம் ஐயரவர்கள் மெஞ்ஞானபுரத்தில் C.M.S மேல் நிலைப்பள்ளியில் 10வது வகுப்பு வரை கல்வி பயின்றார். கல்வி பயிலுங்கால் ஓர் வேதாகமப் போட்டியில் ரோமர் நிருபம் முழுவதும் மனப்பாடம் செய்து எழுதி முதல் பரிசு பெற்றார். பண்ணைவிளையில் நடுநிலைப்பள்ளியில் புகழ்ப்பெற்ற ஓர் கணித ஆசிரியராக 15 வருடம் பணி புரிந்தார். கணிதம் சற்றும் புரியாத மாணவருக்கும் வெகு எளிதாகப் புரியும் முறையில் திறம்பட போதிக்கும் தன்மையுடையவர். அவர்களிடம் பயின்ற மாணாக்கர் பலர் ஆசிரியராகவும், போதகராகவும் பணிபுரிந்தனர்.

1928ம் ஆண்டு குருப்பணிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு ஒரு ஆண்டு மாங்குடியில் உபதேசியாராகவும் ஓர் ஆண்டு வாகைக்குளம் சாட்சியாபுரம் என்ற இடங்களில் தங்கியும் நற்செய்தி பணியாற்றினார். காலம் சென்ற பேராயர் ஜெபராஜ் அவர்களும் குருப்பணிக்கென தேர்ந்தெடுக்கப்பட்டு, இவர்களோடு சேர்ந்து நற்செய்தி பணியில் ஈடுபட்டிருந்தார்கள். பின் இரண்டு ஆண்டுகள் நாசரேத்தில் திருமறைப்பள்ளியில் பேராயர் Rt.Rev.A.M. Hollis, Rt. Rev.Stephen Neil முதலிய அறிஞர்களிடம் கற்று உதவி குருவாக நாசரேத் ஆலயம் அபிஷேகம் பண்ணப்பட்டார்கள். மறுபடியும் ஓர் ஆண்டு காலம் திருமறை கற்று குருவாக அதே ஆலயத்தில் அபிஷேகம் பண்ணப்பட்டு, 1933ம் ஆண்டு வெள்ளாளன்விளை சேகரத்துக்கு 9வது குருவாக நியமுகம் பெற்றார்கள்.

ஒன்பது வருடம் வெள்ளாளன்விளை சேகரத்திலுள்ள 16 ஊர்களையும் மணற்பாங்கான இடங்களில் நடந்து பணியாற்றினார்கள். அங்கு முதலாவதாக ஆர்மோனியம் வாங்கி வைத்து ஞானப்பபாட்டுகளை சிறப்பாகப்பாடும்படி கற்றுக் கொடுத்தார். ஞாயிறுகளில் தெரு ஜெபக்கூட்டங்களைச் சிறப்பாக நடத்தினார். குருமனையை சற்று விஸ்தாரமாக்கி ஆலயக் கூரையை முற்றிலும் பிரித்து புதுப்பித்தும், தேரி வெள்ளாளன்விளைக்கு சீயோன் நகர் எனப்பெயரிட்டு அங்கு சீயோன் ஆலயத்தையும் கட்டி Canon S.S. Clarke அவர்களைக் கொண்டு 3 நாட்கள் வெள்ளாளன்விளையில் ஒடுக்கக்கூட்டம் வைத்துப்பின் Rt.Rev. stephen Neil அவர்களால் பிரதிஷ்டை செய்து வைத்தார். இவர் செய்த சிறந்த பணியைச் சபையார் இன்னும் மறக்கவில்லை .

அதன்பின், ஜீன் 1942 முதல் மே மாதம் 1944 வரை புலவனூரிலும், 1944ல் இருந்து 1951 வரை டோனாவூரிலும், பின் ஜீன் 1951 முதல் மார்ச் 1952 வரை ஆசீர்வாதபுரத்திலும் பணியாற்றினார்கள்.

கனம் ஐயரவர்கள் தம் குருப்பணிவிடையில் ஆராதனை நடத்துவதே ஓர் சிறந்த பரவசமளிக்கும் காட்சியாக இருக்கும். புலவனூர் ஆலயக் காட்சியாளர் புத்தகத்தில் இதைப்பற்றி Rt.Rev. Pakkinham Walsh அவர்கள் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். திருவிருந்து ஆராதனை நடத்தும்போது பத்து கற்பனைகளையும் புத்தகம் பார்த்து படிக்காமல், நேரடியாகக் கைகூப்பிச் சபையைப் பார்த்து விளம்புவது, அவர்களது கம்பீர தொனியில் சீனாய் மலையிலிருந்து வரும் கட்டளைகள் போன்று தோன்றும் குழந்தைகளுக்குத் திருமுழுக்கு கொடுக்கும் போதும், புத்தகம் பாராமல் நேரடியாக மனப்பாடமாக ஜெபப் புத்தகத்திலிருக்கும் விண்ணப்பங்களை ஏறெடுப்பது அதிக பரவசமாயிருக்கும்.

மேலும் ஐயரவர்கள் பிரசங்கம் ஆவியில் உற்சாகமுள்ளதாகவும் சகலவித சபையாரும் நன்கு புரிந்து கொள்ளும் முறையிலுமிருக்கும். அவர்களுக்கிருந்த ஆஸ்துமா நோய் பிரசங்கம் செய்யும்போது முற்றிலும் நின்றுவிடுவது ஓர் ஆச்சரியமான காரியமாகத்தோன்றும். !

திருச்சபை கணக்கு வகையில் மிகவும் திறமையுடன் ஐயரவர்கள் செய்தது ஓர் சிறந்த மாதிரியாகும். டோனாவூர் சபைப் பொறுப்பு எடுக்கும் சமயம் ரூ.7000/- கடனில் இருந்தது. அதை அவர்கள் விட்டு போகும் போது கடன்முழுவதையும் அடைத்துவிட்டு ரூ. 8000 மேற்கொண்டும் சேமித்தும் வைத்தார். அப்படியே ஆசீர்வாதபுரம்சபைக்குசென்றபோது, அங்குசபைவருமானத்துக்கும் மேலாக மாதம் ரூ.200/ அதிக செலவாகிக் கடன் பட்டிருப்பதைக் கண்டார்கள். அதை மாற்றி 10 பத்து மாதங்களுக்குள் ரூ.1000/- மிச்சமாக சேமித்து வைத்துப் பெயர் பெற்றார்கள்.

Rev. ஞானையா அவர்கள் 1952ம் வருடம் மார்ச் மாதம் 22ம் தேதி நெய்யூர் வைத்திய சாலையில் ஓர் அவசர இரணச் சிகிச்சையின்போது கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். மரணப்படுக்கையில் இருந்தபோதும் ஏசாயா 6:8ல் உள்ளபடி **'யாரை நான் அனுப்புவேன் யார் நமது காரியமாய் போவான்'** என அடிக்கடிச் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். கடைசியில் அவர்கள் சகோதரன் Rev.A.S. தங்கையா அவர்கள் அண்ணாச்சியை கர்த்தர் கையில் ஒப்புக்கொடுத்து ஜெபிக்க ஆமென் என்று சொல்லி உயிர் விட்டார். அவர் நாசரேத்தில் உள்ள கல்லறைத் தோட்டத்தில் பேராயர் Rt.Rev.G.T செல்வின் அவர்களால் உயிர்த்தெழுதலுக்கென நல்லடக்கம் செய்யப்பட்டது. இன்னும் அவர்கள் நல்மாதிரிகளும், சிறந்த குருத்துவ ஊழியமும் குடும்பத்தாராலும் சபையாராலும் என்றும் மறக்க முடியாததாக இருக்கின்றன.

# திரும்பிப் பார்ப்போம்!

**- மோஜோ (முதலூர்)**

சமீபத்தில் அரசாங்கம் எடுத்த கணக்கெடுப்பின்படி, கல்கத்தா மற்றும் அதன் சுற்றுப்பகுதிகளில் நான்கு வயதை நிறைவு செய்யாத பத்தாயிரம் விதவைகள் (?) இருக்கிறார்கள். மேலும், ஐந்து முதல் ஒன்பது வயதில் ஐம்பதாயிரத்திற்கும் அதிகமான விதவைகள் இருக்கிறார்கள். தொலைக்காட்சியின் தலைப்புச் செய்திகளில் இப்படி ஒரு செய்தி வெளிவருமாயின் நமக்கு அது பேரதிர்ச்சியாக இருக்குமல்லவா?

225 ஆண்டுகளுக்குமுன், வில்லியம் கேரியின் நாட்களில், இந்தியாவின் நிலைமை இப்படித்தான் இருந்தது. குழந்தைகளை சிறுவயதில் திருமணம் செய்து கொடுக்கும் வழக்கம் இங்கு நிலவி வந்தது. பெண் குழந்தைகளை மிஷன் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புவது பற்றி யோசிக்கும்போதுகூட, பள்ளி தனது கிராமத்தில் இல்லாமல் அடுத்த கிராமங்களில் இருந்தால் பெற்றோர் தங்கள் பெண் பிள்ளைகளை அனுப்புவதில்லை. காரணம் மக்களுக்குத் தான் பெற்ற பிள்ளைகள் மேலேயே நம்பிக்கை இல்லாதிருந்தது. மேலும், ஆண்கள் தங்கள் பெண் பிள்ளைகளை சூறையாடிவிடுவர் என்ற அச்சமும் இருந்தது. பெண் குழந்தைகளின் பாதுகாப்பை உறுதி செய்யவும், குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றவும், மிகக்குறைந்த வயதிலேயே அவர்களைத் திருமணம் செய்துகொடுப்பதே தீர்வு என்று மக்கள் எண்ணினர்.

மேலும், இங்கே பலதார மணமும் (polygamy) பரவலாக நிலவி வந்தது. சிலநேரங்களில், ஒரே பிராமணனுக்கு 50 பெண்கள் பெண் குழந்தைகளைத் திருமணம் செய்து கொடுத்து, தங்கள் வீட்டுப்பெண் ஒரு உயர் ஜாதி மனிதனோடு திருமண உறவில் இருப்பதாக பெருமைப்பட்டுக்கொண்டனர் அப்பாவி மக்கள். கேரியின் சீர்திருத்தங்களுக்கு ஆதரவுகொடுத்த ராம் மோகன்ராய் கூட தனது தகப்பனாரால் மூன்று முறை குழந்தைத் திருமணம் செய்து வைக்கப்பட்டிருந்தார். அவரது முதல் மனைவி மிகச் சிறிய வயதிலேயே மரித்துவிட்டார். அவருக்கு ஒன்பது வயதாய் இருக்கும்போது, மேலும் இரண்டு பெண் பிள்ளைகளோடு அவருக்கு திருமணம் நடந்தது. இப்படி மிகச் சாதாரணமாக நிலவி வந்த இந்தச் சமுதாய தீமைகளை அகற்ற வில்லியம் கேரி முயற்சி செய்தார். இத்தீமைகளின் தார்மீக (moral) மற்றும் சமுதாய (social) வேர்களை தகர்த்தெறிவதே நிரந்தர தீர்வுண்டாக்கும் என்று அவர் எண்ணினார்.

பரிசுத்த வேதாகம போதனை மூலம் குழந்தைத் திருமணத்தின் தார்மீக வேர்களையும், பெண்கல்வி கொடுப்பதன் மூலம் அதன் சமுதாய வேர்களையும் அகற்றமுடியும் என்றும் **'தரிசனவாதி'** கேரி எண்ணினார். மேலும், பெண்கல்வி கொடுப்பதன் மூலம் பெண்களை யாரையும் சார்ந்து நிற்காமல் சொந்தக்காலில் நிற்கச்செய்ய முடியும் என்றும் கேரி தீர்க்கமாக எண்ணினார். எனவேதான் கேரி பல மொழிகளில் வேதாகமத்தை மொழியாக்கம் செய்தார். மேலும் ஹேனா மார்ஷ்மன் மூலம், பெண்கள் கல்வி பயில பள்ளிகளை நிறுவினார். எவ்வளவு சீரிய எண்ணத்தோடும், பரந்த தரிசனத்தோடும் கேரி செயல்பட்டிருக்கிறார் பாருங்கள்!

இன்றைக்கு மிஷனரி ஊழியம் மூலம் நாமும் மக்களுக்கு வேதாகம போதனை கொடுக்கிறோம், பள்ளிகளை நிறுவி கல்வி கொடுக்கிறோம். மிகவும் நல்ல, பாராட்டப்பட வேண்டிய காரியங்கள். ஆனாலும் நாம் அதை என்ன நோக்கத்தோடு செய்கிறோம் என்பதில் நம்மில் அநேகருக்குத் தெளிவு இல்லை என்று நான் எண்ணுகிறேன். ஆரம்பித்தாகிவிட்டது, பெற்றோர் என்னை ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்துவிட்டனர், செய்து தான் ஆகவேண்டும் என்ற எண்ணத்தோடு நாம் எல்லாவற்றையும் பெயரளவுக்குச் செய்கிறோமோ என்று எனக்குள் கேள்வி இருக்கிறது. நமக்குத் தேவை கேரியைப் போன்ற தொலைநோக்குப் பார்வை கொண்டோர்! (visionaries)

அன்பான வாசகர்களே! ஒருவேளை, கேரியின் நாட்களில் இருந்ததுபோல் இன்று ஆயிரக்கணக்கான சிறுமிகள் விதவைகளாக இல்லை. இன்று குழந்தைத் திருமணம் அதிக அளவில் குறைக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், குழந்தைத் திருமணம் முழுவதுமாக ஒழிக்கப்படவில்லை. வறுமையின் காரணமாக இன்றும் சில இடங்களில் பெண்பிள்ளைகள் சிறு வயதிலேயே திருமணம் செய்துகொடுக்கப்படுகின்றனர்.... கேரி தோற்றுப்போய் விட்டாரா?..... இல்லை.... நாம் தான் தோற்றுப்போய்விட்டோம். அவர் விதை ஊன்றி வளர்த்த சீர்திருத்தச் செடியை நாம் பராமரிக்கத் தவறிவிட்டோம். ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்ளவே நமக்கு நேரம் போதவில்லையே!

ஒரு கேள்வி கேட்கிறேன்? சமுதாய தீமைகளை அகற்ற சபையாக, சங்கங்களாக, சபையின் அங்கத்தாராக இன்று நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம்? நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன்? மிஷனரிகளால் பலனடைந்த படித்த வாலிபரே! லட்சங்களைச் சம்பாதிப்போரே! என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நான் இருக்கும் மாவட்டமும், மாநிலமும் நன்றாய் இருக்கிறது என்று முடங்கிக் கிடந்துவிடாதீர்கள். இன்னும் தேசத்தின் பல பகுதிகளில் சமுதாயத் தீமைகளை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது. கேரியைப் போல நானும் நம்புகிறேன் - பரிசுத்த வேதாகம போதனை மற்றும் முறையான கல்வி கொடுப்பதின்மூலம் இந்தியாவில் மாற்றத்தைக் கொண்டுவர முடியும். இதைச்செய்ய இன்றே புறப்படுவீர்.

**பெரிய பர்வதமே, நீ எம்மாத்திரம்?**
**செருபாபேலுக்கு முன்பாக நீ சமபூமியாவாய்!**

# மறைதிரு. டாக்டர். பா. தர்மராஜன் அவர்களின்

## வாழ்க்கை குறிப்பு

**அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்**

மறைதிரு. பா. தர்மராஜன் ஐயர் அவர்கள் 30.08.1919ம் ஆண்டு பண்ணைவிளை திரு. த. பாலசுந்தரம் உபாத்தியாயர் அவர்களுக்கும் திருமதி. ஜெபமணி அம்மாள் அவர்களுக்கும் இரண்டாவது மகனாக பிறந்தார்கள்.

அவர்கள் 8 வயது சிறுவனாக இருந்த பொழுதே தந்தையை இழந்து தனது இளவயது விதவைத் தாயாருடனும் மூத்த சகோதரி, இளைய சகோதரியுமாக தூத்துக்குடி புகைவண்டி நிலையத்தில் எங்கு செல்வது என்ன செய்வது என்று திகைத்து அழுது கொண்டிருந்த வேளையில் ஆங்கில மிஷனெரி அம்மா ஒருவர் அருகில் சென்று விபரம் கேட்க ஐயர் அவர்களின் விதவைத் தாயார் அவர்கள் விபரங்களைக் கூறியிருக்கிறார்கள். அந்த மிஷனெரி அம்மா அவர்கள், அனைவரையும் தன் குழந்தைகளைப் போன்று அரவணைத்து தழுவ அனைவரையும் தம்முடன் அழைத்துச் சென்றிருக்கிறார்கள்.

மிஷனெரி அம்மாள் அவர்கள் அருப்புக்கோட்டையை மையமாக வைத்து இறைத் தொண்டாற்றி வந்திருக்கிறார்கள். அம்மையார் அவர்கள், ஐயர் அவர்கள், அவர்களின் இரு சகோதரிகள் மூவரையும் தம்முடைய பொறுப்பில் வைத்து படிக்க வைத்திருக்கிறார்கள்.

அத்தோடு அல்லாமல் ஐயர் அவர்களின் விதவைத் தாயார் அவர்களுக்கு தமது இறைப்பணியில் இணைந்து பணியாற்ற அவர்களுக்கு பயிற்சி அளித்து **“வேதாகமப் பெண்”** (Bible Women) என்ற பட்டம் கொடுத்திருக்கிறார்கள். வாஞ்சையுடன் ஊழியத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள்.

ஐயரவர்களின் தாயார் மிகவும் கண்டிப்பானவர்கள். அவாகள் தன்னுடைய மூன்று குழந்தைகளையும், ஒழுக்கத்திலும் தேவபக்தியிலும் சிறப்பாக வளர்த்து வந்தார்கள்.

இவ்விதமாக ஐயர் அவர்கள் அன்பிலும் அறிவிலும், ஞானத்த தேவகிருபையிலும், மனுஷர் தயவிலும் வளர்ந்து பெருகி தனது படிப்பை அருப்புக்கோட்டையிலும், மதுரையிலும் முடித்து ஆசிரியர் பயிற்சியும் முடித்தார்கள்.

அந்த பயிற்சியின் பயனாக ஆசிரியர் பணி செய்து வந்தார்கள். அவர்கள் மதுரை மாவட்டத்திலேயே தனது ஆசிரியர் பணியை நிறைவேற்றி வந்தார்கள். இவ்விதமாக அவர்கள் ஒரு நடுநிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியராகப் பணி செய்து வரும் வேளையில் தம்முடைய சொந்த இடத்திற்கு வரவேண்டும், நம்முடைய திருமண்டலத்தில் சொந்த திருச்சபைகளில் பணியாற்ற வேண்டும் என்ற ஆர்வத்தில் 1950ம் ஆண்டு பண்ணவிளையில் பணியாற்றி வந்த மறைதிரு. ஜாண் சாமுவேல் ஐயர் அவர்களின் மூலமாக ஏரல் திருச்சபையில் ஆசிரியர் பணி ஏற்று சபைப்பணியையும் ஏற்று செய்தார்கள்.

ஐயர் அவர்களின், சுறுசுறுப்பையும் ஆற்றலையும், அறிவையும், வேதஞானத்தையும் அறிந்த மறைதிரு. ஜாண்சாமுவேல் ஐயர் அவர்கள் மறைதிரு. பா. தர்மராஜ் ஐயர் அவர்களை திருமண்டல சிறுவர் ஊழிய பணியில் அமர்த்த செய்தார்கள்.

1951-1953 வரையில் அந்த ஊழியத்தில் இருந்த அந்தப் பொறுப்பைத் திரு.R.S. ஜேக்கப் தமிழ் வித்துவான் அவரிடம் ஒப்படைத்துவிட்டு தனது திருமறைப் படிப்பை 1953 முதல் 1956 வரை திருமறையூரிலே பயிற்சி முடித்து அது முதல் தனது குருத்துவ ஊழியத்தை திருநெல்வேலி மறைமாவட்டத்திலுள்ள நாஞ்சான்குளம் என்ற கிராமத்தில் ஆரம்பித்து பணியைத் தொடர்ந்தார்கள்.

ஐயர் அவர்கள் தனது ஊழிய பாதையில் எத்தனையோ இடர்கள், துன்பங்கள் வந்த போதும் நிர்வாகத்திலும், சபை ஒழுங்கிலும் மிரட்டல்களோ, சீர்கேடுகளோ நிகழ்கின்ற போதும் மனம்தளராது, தைரியத்துடன் இறைவனின் துணையோடு எதிர்கொள்ளும், மனதுடையவர்களாய் இருந்தார்கள்.

அவர்கள் தனது ஊழியத்தில் அநேக பிரசங்க குறிப்புகளை எழுதியுள்ளார்கள். அருளுரைகள் என்ற புத்தகத்தை எழுதி 1ம் பாகம், 2ம் பாகம் என இரண்டு புத்தகங்களை வெளியிட்டுள்ளார்கள்.

மேலும் கிறிஸ்தவர்களின் நகையும், வரதட்சனையும் Christian Jewell and Dowry) என்ற புத்தகம் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.!

ஓசியா தீர்க்கதரிசன புத்தகத்தின் விளக்க உரை எழுதி வெளியிட்டுள்ளார்கள். திருமறையில் ஐயர் அவர்கள் டாக்டர் பட்டமும் பெற்றுள்ளார்கள். இரண்டு ஆண்டுகள் CSI Synod Member ஆக இருந்துள்ளார்கள்.

ஐயர் அவர்கள் மெஞ்ஞானபுரத்தில் Council Chairman ஆக இருந்த பொழுது மிகவும் முயற்சி செய்து B.E., கல்லூரியை நிறுவினார்கள் 1984-85 இவ்விதமாக தனது ஊழியத்தை நிறைவேற்றி பணி ஓய்வு பெற்று இருந்த பொழுது மாமறைதிரு. ஜேசன் தர்மராஜ் பேராயர் அவர்களின் வேண்டுதலின் பேரில் நாசரேத் அருகிலுள்ள பாட்டக்கரை என்ற கிராமத்தில் முதல் குருவானவராக 1986ல் பணி ஏற்று செய்து வந்த பொழுது தனது 69வது வயதில் 07.08.1988 அதிகாலை 2 மணிக்கு நாசரேத் பரி.லூக்கா மருத்துவமனையில் இறைவன் கொடுத்த ஆவியை அவர் கரத்தில் ஒப்புக்கொடுத்து மண்ணுலகை விட்டு விண்ணுக்கு சென்றார்கள்.

அவர்களின் சரீரம் உயிர்த்தெழுதலுக்கென்று பாட்டக்கரை திருச்சபையின் கல்லறைத் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது.

# தேசிகர் இ. சி. ம. லாசரு தாசர்.

1852 -1936

அருட்திரு.பேராசிரியர். மா. தேவராஜ்

நீலகிரி மாவட்டம் உதகமண்டலத்திலுள்ள பாப்திஸ்து ஆலயத்தின் நிறுவனரும் போதகரும் அனைவராலும் "லாசரு ஐயர்" என்றுப் போற்றப்படுகின்ற அருட்திரு இ.சி.ம. லாசரு தாசர் அவர்கள் இ. சி. மலையப்பர் என்ற கத்தோலிக்க கிறிஸ்தவருக்கு 1852 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12ஆம் நாள் அன்றைய வட ஆர்காடு மாவட்டம் இராய வேலூரில் இன்றைய வேலூர் வட்டத்தில் பிறந்தார்.

இ.சி.ம. லாசருவின் இளவயதிலேயே அவரது தந்தை இ. சி. மலையப்பர் அவர்கள் காலமானதால் உதகமண்டலத்திலுள்ள தன் சிறிய தந்தை(சித்தப்பா) திரு. இ. சி. அந்தோணி அவர்களின் பராமரிப்பில் வளர்ந்து, உதகமண்டலத்திலேயே கல்விக் கற்று, பக்தியிலும் தேவாலய ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கினார். புலவர் சா.பா.அந்தோணிதாஸ் அவர்களிடம் முறையாக தமிழ் இலக்கண இலக்கியங்களை கற்றுத் தேறினார்.

உதகமண்டலம் புனித மரியன்னைக் குன்றிலிருந்த புனித மோட்சராக்கினி பஜனை சங்கத்தில் மிகுந்த ஈடுப்பாடுக் கொண்டார். இயற்கையிலேயே கவியியற்றும் திறன் கொண்டவராயிருந்தார், இதனால் இவர் பல கவிதைகளை மோட்சராக்கினி மாதாவுக்கு இயற்றியுள்ளதாகத் தெரிகின்றது, அவைகள் நமக்கு கிடைக்கவில்லை மட்டுமல்லாது இவர் தீவிர ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவ பற்றாளரானதால் தமது நம்பிக்கைக்கு எதிராக தோன்றிய கருத்துக்களுக்கு கவிதைகளிலேயே தைரியமாக பதிலளித்தார், ஆனால் அக் கவிதைகள் எதுவும் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. இவர் சீர்திருத்த கிறிஸ்தவர்களுக்கு பதிலளிக்கும் நோக்கில் சீர்திருத்த கிறிஸ்தவர்கள் பயன்படுத்திய திருமறையைப் படிக்கத் தொடங்கினார். இதனால் இங்கிலாந்தைச் சேர்ந்த அருட்திரு ஜி. பீயர்ஸ் என்ற பாப்திஸ்து திருச்சபையின் அருட்பணியாளர்களுடன் இவருக்கு தொடர்பு ஏற்பட்டது.

இ.சி.ம. இலாசரு அவர்கள் அருட்திரு ஜி. பியர்ஸ் அவர்களின் நட்பின் நிமித்தம் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவத்தை விட்டு சீர்திருத்த கிறிஸ்தவத்தை ஏற்று 1876ஆம் ஆண்டு தண்ணீர் திருமுழுக்குப் பெற்று உதகமண்டலத்தின் பாப்திஸ்து திருச்சபையின் முதல் அங்கமாகவும் அருட்திரு ஜி. பியர்ஸ் அவர்களின் உடன் ஊழியராகவும், அவரால் பாப்திஸ்து திருச்சபையின் ஒழுங்குப்படி திருப்பொழிவுப் பெற்று உதகமண்டல பாப்திஸ்து திருச்சபையின் முதல் இந்திய ஆயராகவும் தம் திருப் பணியை நிறைவேற்றினார்.

அருட்திரு இ.சி.ம. லாசரு அவர்கள் நீலகிரி மாவட்டத்தின் பாப்திஸ்து திருப்பணிகள் தொடங்கப்படுவதற்கு முக்கியக் காரணமாயிருந்து, உதகமண்டலத்தில் மட்டுமல்லாது குன்னூரிலும் பாப்திஸ்து திருச்சபையின் திருப்பணி மற்றும் தேவாலய கட்டிடங்கள் ஏற்பட திரு.மைக்கேல், திரு.ஆசீர்வாதம், ஆர். சாமுவேல் ஆகியோரோடு இணைந்து அரும்பாடுபட்டார்.

உதகமண்டலத்தில் பாப்திஸ்து தேவாலய கட்டிடம் கட்டுவதற்காக திருமதி பீயர்ஸ் அவர்களிடம் அவர்களுக்கு சொந்தமான இடத்தில் ஒருப் பகுதியை நன்கொடையாக பெற்றார். அந்த இடத்தில் கட்டிடம் கட்ட இவர்களிடத்தில் எழுத்துப் படி ஒரு சல்லிக் காசுக் (ஒரு பைசா) கூட இல்லா நிலையில் "விசுவாசத்தால் நீதிமான் பிழைப்பான்" என்ற வார்த்தையின் அடிப்படையில் விசுவாசத்தில் உறுதியாக செயல்பட்டு உதகமண்டலத்தில் பல நல்லுள்ளங்களின் நன்கொடையினால் சிறப்பான முறையில் அழகிய பாப்திஸ்து தேவாலயக் கட்டிடத்தை கட்டி திருப்படைப்புச் செய்தார்.

அருட்திரு இ.சி.ம. லாசர் அவர்கள் 1870ஆம் ஆண்டு தம் 18ஆவது வயதில் மகதலேனா மரியா அவர்களை வாழ்க்கைத் துணையாக கைப்பிடித்தார். அடியார்களது இனிமையான திருமண வாழ்வின் சுமார் 25 ஆண்டுகளுக்குப் பின்னர் ஆயரது 43வது வயதில் 1896ஆம் ஆண்டு அவர்களுக்கு வைரக்கண் சாமுவேல் என்ற ஆண் மகன் பிறந்தார். இவர் தமது திருமண நாளில் காலமானார்.

அருட்திரு இ.சி.ம. லாசர் அவர்கள் ஒரு சிறந்த தமிழ் கிறிஸ்தவ அருட்கவிஞர், நாடக ஆசிரியர், எனப் பன்முகம் கொண்டவர். சீர்திருத்த கிறிஸ்தவ விசுவாசத்திற்குள் வருவதற்கு முன் மரியன்னைக் குன்று புனித மோட்சராக்கினி பஜனை சங்கத்திலிருக்கையில் அவர் இயற்றியப் பாடல்கள் குறித்து சரியான தகவல் எதுவும் இல்லை, இருப்பினும் இவர் இயற்றிய சுமார் பன்னிரண்டு கீர்த்தனைகளும்; கதைப் பாடல்கள்: ஞான சுத்தர சபாகளுக்கு சுந்தர சபா, ரெபெக்காவின் திருமணம், திரித்துவ தோத்திர ஆரம், பரலோக யாத்திரை, நல்ல சமாரியன் யோசேப்பின் சரிதை போன்ற ஏழு புத்தகங்கள் மட்டும் இன்று எஞ்சியுள்ளது.

அருட்திரு இ.சி.ம. லாசர் அவர்கள் திருமண வாழ்த்துப்பாக்கள் மற்றும் தனிப் பாடல்கள் புனைவார், கிறிஸ்மஸ் காலங்களில் உதக மண்டலத்திலுள்ள அனைத்து திருச்சபையாருக்காகவும் கிறிஸ்மஸ் பூபாளங்களையும் இயற்றி கிறிஸ்மஸ்ஸை சிறப்பாக்குவார். இவரது கவித்திறனைப் போற்றி இவருக்கு அந்நாளில் தமிழ் சங்கத்தார் 'தேசிகர்' மற்றும் 'செந்தமிழ் அபிமானி' போன்ற சிறப்புப் பட்டங்களை வழங்கி இவரை சிறப்பித்துள்ளனர்.

அருட்திரு இ.சி.ம. லாசர் அவர்கள் வயதான காலத்தில் நோயுற்று, உடல் மெலிந்து, கண் பார்வை மங்கி, பார்வையிழந்து, வாய் குழறி 1936ஆம் ஆண்டு தமது 84ஆம் வயதில் தம் நித்திய இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார். இவர் மரணம் அடைவதற்கு முந்தின நாள் இரவு இவரைப் பார்க்க வந்தவர்களிடம் தாம் இயற்றிய "நல் மரணம் தருவாய்" என்றப் பாடலைப் பாடக் கேட்டு அமைதியாக இளைப்பாறினார்.

இறைவனுக்கே இயேசு கிறிஸ்துவின் வழியாக புகழுண்டாவாதாக

# கனம் D. M. பாக்கியநாதன் ஐயரவர்களுடைய ஜீவிய சரித்திரம்

மன்னா செல்வகுமார்

D. M. பாக்கியநாதன் ஐயரவர்கள் நாசரேத் சபையை அடுத்த பிரகாசபுரத்தில் பூசாரி குடும்பம்' என்று இந்நாள் வரைக்கும் அழைக்கப்பட்டுவருகிற ஓர் பிரபலமான குடும்பத்தில் மெஞ்ஞானபுரம் கனம் ஜான் தாமஸ் ஐயர், அவர்களின் ஊழியத்தின் பலனாக கிறிஸ்து மார்க்கத்தமைந்து 1869-ம் வருஷம் குருப்பட்டம் பெற்று திருநெல்வேலிச் சபையின் கீழ்பாகங்களின் அநேக மகிமையான சபைகளை ஸ்தாபித்த கனம் மாசிலாமணி பாக்கியகநாதன் ஐயர்வர்களுடைய மூத்த குமாரர். 1852-ம் வருஷம் அக்டோபர் மாதம் 15-ம் தேதி பிரகாசபுரத்தில் பிறந்து தகப்பனார் பாளையங்கோட்டையில் வேதசாஸ்திரம் படித்துக்கொண்டிருந்த காலத்தில் அங்கே குழந்தையாய் வளர்ந்தார்கள்.

1865-ம் வருஷம் மெஞ்ஞானபுரம் போர்டிங் ஸ்கூலில் சேர்த்து 5 வருஷம் கல்வி கற்றார்கள். அக்காலத்தில் கனம் பெரிய தாமஸ் ஐயாவர்களும் அம்மாளவர்களும் தங்கள் பிள்ளைகளில் ஒன்றாய் நேசித்து வந்தார்கள். 1871-ம் வருஷம் பாளையங்கோட்டை பிரப்பரேன்டி வித்தியாசாலைக்கு (Preparandi institution) அனுப்பப்பட்டார்கள். அங்கே மகாகனம் சார்ஜென்ற் அத்தியக்ஷரவர்கள், கனம் ஆஷ்டன் டிப் ஐயாவர்கள் கீழ் 3 வருஷம் படித்தார்கள். பின் இங்கிலீஷ் கற்கும் படி கனம் கெம்பர் ஐயரவர்களிடம் வடக்குக் கல்விச்சாலைக்கு அனுப்பப்பட்டு 2 1/2 வருஷம் கற்று மெட்ரிக்கியுலேஷன் பரீக்ஷை பாஸ்பண்ணினார்கள்.

1871-ம் வருஷம் தங்கள் அருமை தகப்பனார் கனம் மாசிலாமணி பாக்கியநாதன் ஐயரவர்கள் பேர்ப்பூலாங்குளத்தில் மரித்துப்போனார்கள், குடும்பப் பாரம் தங்கள் மேல் விழுந்தபடியால் மேலே கல்வி கற்க முடியாமல் 1876-ம் வருஷம் கனம் ஆஷ்டன் டிப் ஐயரவர்கள் மெஞ்ஞானபுரம் போர்டில் பள்ளியில் வேலை கொடுத்தார்கள். கனம் ஆஷ்டன் டிப் ஐயர்வர்கள் சுகவீனத்தால் 'சீர்மை தேசம்' போன போது மகாகனம் சார்ஜென்ற் அத்தியரவர்கள் மெஞ்ஞானபுரம் சேகரத்தையும் மேல்விசாரணை செய்தபடியால் 1878-ம் வருஷம் அவர்கள் அனுமதியின் பேரில் ஆர்க்காட் அமெரிக்க மிஷனில் டாக்டர்.ஜான் ஸ்கடர் ஐயரவர்கள், டாக்டர்.எசேக்கியேல் ஸ்கடர் ஐயரவர்கள், டாக்டர்.ஒய்க்காப் ஐயரவர்கள், மான்றுவெல் மிசியம் மாணவர்கள் முதலிய பேர்போன அமெரிக்க மிஷனரிகளின் கையின் கீழ் சித்தூரிலும், வேலூரிலும் பெண்களுக்கென்று ஏற்பட்ட செமினெரியில் 7 வருஷகாலம் வேலை செய்து வந்தார்கள்.

1885-ம் வருஷம் மகாகனம் சார்ஜென்ற் அத்தியக்ஷரவர்கள் சென்னை பட்டணம் டிவினிற்றி ஸ்கூலுக்கு அனுப்பினார்கள். அவர்களுக்குப் படிப்பித்த கனம் கோல்ட்ஸ்மித் ஐயாவர்கள், அவர்கள் வேதசாஸ்திர அறிவைக் குறித்து புகழ்ந்து மிகுந்த அன்புபாராட்டினார்கள். எல்லா மாணாக்கர்களும் மூன்று வருஷம் படிக்கவேண்டும் என்பது ஏற்பாடு, ஆனால் ஐயரவர்கள் இங்கிலீஷ், கிரேக், எபிரேயு முதலிய சகல பாடங்களிலும், எந்தப் பரீக்ஷையிலும் முதன்மையாயிருந்தபடியால் மகாகனம் ஜெல் அத்தியக்ஷரவர்கள் இரண்டு வருஷம் போதுமானதென்று தகுந்த சர்டிபிக்கெற்றோடு மகாகனம் சார்ஜென்ற அத்தியக்ஷாவர்களிடம் அனுப்பினார்கள். அத்தியக்ஷாவர்களிடம் அனுப்பினார்கள். அத்தியக்ஷாவர்கள் பாளையங்கோட்டை சேகரத்துக்கு விசாரணை உபாத்தியாயராக வேலை கொடுத்தார்கள்.

1868 ம் வருஷம் மகாகனம் சார்ஜென்ற் அத்தியக்ஷரவர்களால் உதவி குருப்பட்டம் பெற்றார்கள். பாளை பங்கோட்டையிலிருந்து கொண்டு பார்வதியாபுரம், நாஞ்சாங்குளம் பாஸ்றறபேற்றுகளைப் பார்த்துக்கொண்டு சி.எம்.எஸ் ஆபீஸிலும் வேலைபார்த்துக்கொண்டு வந்தார்கள்.

அதே வருஷம் ஸ்பெஷல் மிஷன் நடத்தும்படி சீர்மை கமிற்றிமார் கனம் பேரிங் கோல்ட் ஐயரவர்களையும், கனம் கார்ணி ஐயரவர்களையும் அனுப்பினார்கள். அப்பொழுது அவர்களுக்குத் தமிழ் திருப்பும்படி மகாகனம் சார்ஜென்ற் அத்தியக்ஷரவர்கள் ஐயரவர்களை அனுப்பினார்கள். பாளையங்கோட்டை, மெஞ்ஞானபுரம், வெள்ளாளன்விளை, பண்ணைவிளை, சுவிசேஷபுரம், சாத்தன்குளம், டோனாவூர், நல்லூர், பங்களாச்சுரண்டை முதலிய சேகரங்களுக்கெல்லாம் அவர்களோடு போய் மிகுந்த திறமையோடும் உற்சாகத்தோடும் ஆத்துமாக்களின் இரட்சிப்புக்கென்று அருமையான ஊழியஞ்செய்தார்கள். அதைக்குறித்து ஐயரவர்கள் தங்களுக்கு அந்த ஊழியத்துக்கென்று விசேஷித்த கிருபையும், வரமும், பெலனும் உன்னதத்திலிருந்து கிடைத்ததென்று அடிக்கடி சொல்லுவார்கள்.

அதன்பின் தங்களை அன்புடன் நேசித்த மகாகனம் சார்ஜென்ற் அத்தியக்ஷரவர்கள் மரணப்படுக்கையில் கூடவேயிருந்து அவர்களால் அநேக ஆசீர்வாதங்கள் பெற்று தங்கள் கையால் அவர்கள் கண்களை மூடினார்கள். ஒரு மாதத்துக்குள் சீர்மை கமிற்றிமார் கனம் ஜான் பார்ட்டன் ஐயாவர்களை அனுப்பினார்கள் அவர்களோடும் எல்லா சேகரங்களுக்கும் போய் தமிழ் திருப்பினார்கள். 1890-ம் வருஷம் கனம் பார்ட்டன் ஐயரவர்கள் மிஷன் டிஸ்ற்றிரிக்ட் இன்ஸ்பெக்ற்றாக சேர்மாதேவிக்கு அனுப்பினார்கள். அவர்களுக்கு உதவியாக சிலுவைமுத்து உபதேசியாரையும் கொடுத்து அவர்கள் தலையின் மேல் கைகளை வைத்து ஜெபம்பண்ணி அனுப்பினார்கள். அக்காலத்தில் இருள் நிறைந்த அந்த இடத்தில் கிறிஸ்தவர்களே கிடையாது. அப்படியிருந்தும் முதல் முதல் கிறிஸ்துவின் அன்பை போதிக்க மிகவும் தைரியமாய் வந்து தங்கள் அன்பான போதனையினாலும், தங்கள் சாந்தமாக நடக்கையினாலும், தங்கள் அன்பான முகமலர்ச்சியினாலும் அவ்விடத்து ஜனங்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றுக்கொண்டார்கள். 20 நாள் வெளியே தங்கி

வேலை செய்யவேண்டும் அவர்கள் போய் பிரசங்கிக்காத ஒரு சின்ன கிராமம் கிடையாது. பெரிய அந்தஸ்துள்ள மேல் ஜாதியாருக்கும், தாழ்ந்த ஜாதியார் என்று சொல்லப்படுகிற எல்லாருக்கும் இயேசுவின் இன்பநாமத்தை உயர்த்திக் காட்டினார்கள். நான் அக்காலத்தில் 3 வருஷம் செய்த வேலையை ஒருவரும் முப்பது வருஷத்தில் செய்யமாட்டார்கள் என்று ஐயாவர்கள் அடிக்கடி சொல்லுவார்கள். அவர்கள் வேலை செய்த தினசரி டைரியை கனம் ஜான் பார்ட்டன் ஐயாவர்களின் உத்தரவின் பிரகாரம் சீர்மைக் கமிற்றிக்கே ஒவ்வொரு மாசமும் அனுப்பி வந்தார்கள். அநேக ஆத்துமாக்கள் தேவனுக்கு மகிமையாக ஐயாவர்களுடைய கிரீடத்தில் நக்ஷத்திரங்களாகப் பிரகாசிப்பார்கள் என்பதற்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

1890-ம் வருஷத்தில் கனம் கிரப் ஐயாவர்கள் சீர்மையிலிருந்து வந்து ஸ்பெஷல் மிஷன் நடத்தினார்கள். அப்பொழுது கவுன்சில் முதலாளியாக இருந்த கனம் உவாக்கர் ஐயரவர்கள், ஐயர்வர்களைத் தமிழ் திருப்பும்படி அனுப்பினார்கள். அவர்களோடு எல்லா சேகரங்களுக்கும் போய் ஒரு மாசமாய் வேலை செய்தார்கள். கனம் கிரப் ஐயாவர்கள் செய்த அருமையான பிரசங்கங்களை யெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து தமிழில் புஸ்தகமாகப் பிரசுசம் செய்தார்கள்.

அதே வருஷம் டிசம்பர் மாசம் 21-ம் தேதியில் மகாகனம் ஜெல் அத்தியக்ஷாவர்களால் சென்னைப்பட்டணம் பரி. இம்மானுவேல் ஆலயத்தில் குருப்பட்டம் பெற்றார்கள்.

செவ்வல் சர்க்கிளில் கனம் கார் ஐயாவர்களுக்குச் செக்கரெட்டரியாக 1 வருஷம் வேலைபார்த்தபின் ஷை. சர்க்கிளுக்கு முதலாளியாக சேர்மாதேவியிலிருந்து கொண்டு 7 ½ வருஷக்காலம் சர்க்கிளின் வேலையை நடப்பித்து வந்தார்கள். 1894-ம் வருஷம் கனம் மார்ட்டின் ஹால் ஐயரவர்களோடு பாளையங்கோட்டையிலும், பண்ணைவிளையிலும். சில வாரங்கள் தங்கி அவர்களுடைய 18 அருமையான, பிரசங்கங்களை தமிழில் திருப்பினார்கள்.

1898-ம் வருஷம் சுரண்டை சர்க்கிளுக்கு மாற்றப்பட்டார்கள். 1899-ம் வருஷம் உண்டான சிவகாசி கலகத்தில் சுரண்டை சாக்கிளிலுள்ள அநேக சபைகளுக்கு கொடிய துன்பம் உண்டானபோது மகா தையரித்தோடு தன் சபைகளுக்காக தன் ஜீவனைக் கொடுக்க உடன் பட்டார்கள். எத்தனையோ இந்து சிநேகிதர்கள் வந்து 'நீங்கள் எங்கள் வீடுகளில் வந்து இருங்கள். உங்கள் ஜாமான்களை நாங்களே எடுத்துக்கொண்டு வைக்கிறோம் என்று சொன்னார்கள்.' அப்படிச் செய்யமாட்டேன். என் ஜனங்களைவிட என் உயிர் பெரிதல்ல என்று சொன்னார்கள். என் வீட்டிலுள்ள ஒன்றுகூட வெளியே போகக்கூடாது. எல்லாம் போய்விட்டாலும் என் ஆண்டவர் திரும்பத் தருவார் என்று சொல்லிவிட்டார்கள். அரசாங்கத்திற்கு மாத்திரம் ஒரே நாளில் எட்டு தந்தி கொடுத்தார்கள். உடனே திருச்சினாப்பள்ளியிலிருந்து பட்டாளம் வந்து கலகத்தை அடக்கினது. கனம் உவாக்கர் ஐயாவர்களும், கனம் கார் ஐயரவர்களும், ஐயரவர்களுடைய தைரியத்தையும் பார்க்கிரமத்தையும் வியந்து கொண்டார்கள். சுரண்டை சர்க்கிள் சபைகள் முழுதும் ஐயாவர்கள் செய்த உதவிகளையும் சபைகள் மேல் அவர்கள் வைத்திருந்த அன்பையும் இன்றளவும் சொல்லி அவர்களை நேசித்துக் கொண்டாடுகிறார்கள். 7 வருஷம் சுரண்டையில் இருந்த பின் மறுபடியும் செவ்வல் சர்க்கிளுக்கே மாற்றப்பட்டு இடையன்குளத்திலிருந்து கொண்டு 6 வருஷம் அந்த சர்க்கிளை மேல்விசாரித்து நடத்தி வந்தார்கள். பின் நாலு வருஷம் நாலுமாவடி சர்க்கிளிலும், 6 வருஷம் ஆள்வானேரி சர்க்கிளிலும் சர்க்கிள் முதலாளியாக வேலை பார்த்து வந்தார்கள். ஆகவே 33 வருஷகாலம் சர்க்கிள் முதலாளியாக வேலைபார்த்து வந்தார்கள். ஆகவே 33 வருஷகாலம் சர்க்கிள் சேர்மனாக மிகுந்த திறமையோடும், ஞானத்தோடும் வேலை நடத்தி வந்ததும் அல்லாமல் ஆத்துமாக்களை அருமை இரட்சகரண்டையில் கொண்டுவரத்தக்கதாய் ஆவிக்குரிய போதனைகளை மிகுந்த ஞானத்தோடும், அன்போடும் செய்தும் வந்தார்கள். அருமை இரட்சகர் தான் அவர்கள் பிரசங்கம். ஒருநாளில் எத்தனை பிரசங்கங்கள் செய்தாலும் அவர் ஒருவரைத்தான் உயர்த்திக் காட்டுவார்கள். சபைகளுக்கு என்ன துன்பம் நேரிட்டாலும் கர்த்தர் தங்களுக்கு அளித்திருந்த திறமைக்குத்தக்கதாக அனுதாபத்தோடு உதவி செய்வார்கள்.

நற்போதகம் என்னும் புத்திரிகைக்கு அநேக வருஷங்களாய் பத்திராதிபராக இருந்து மகாகனம் ஜெல் அத்தியக்ஷரவர்களுடைய பந்தய பரீஷைக்குப் படிக்கிறவர்களுக்குப் பிரயோஜனமாக பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் அநேகம் ஆகமங்களுக்கு வியாக்கியானம் எழுதினார்கள். கடந்த 5 வருஷங்களாய் "இரத்தினக்கொத்து," "நமது உண்மையுள்ள தேவன்" என்கிற அருமையான வியாசங்களை எழுதி வந்தார்கள். அநேக குருமாரும் ஆஜாமிகளும் தங்களுக்கு அருமையாயும் பிரயோஜனமாயும் இருந்ததாக சாட்சி பகர்த்திருக்கிறார்கள்.

இதோடு கனம் ஐயாவர்கள் அம்பாசமுத்திரம் தாலுகாவில் 7 வருஷமும், திருச்செந்தூர் தாலுகாவில் 4 வருஷமும், ஆக 11 வருஷகாலம் தாலுகா போர்டு மெம்பராயிருந்து அந்த இரு தாலுகாவிலுமுள்ள கிறிஸ்தவர்களுக்குப் பேருதவி புரிந்துவந்தார்கள். கடைசியாக 1922-ம் வருஷக் கடைசியில் வியாதியினால் தேகம் பல வீனமானபடியால் 1923-ம் வருஷம் பெப்ருவரி கவுன்சிலில் பென்ஷனுக்காக எழுதி முன் வேலை நடத்திய சேர்மாதேவிக்கு வந்து சேர்ந்தார்கள்.

ஆனால் பென்ஷன் கையில் வாங்கு முன்னதாகவே "உத்தமும் உண்மையும்முள்ள ஊழியக்காரனே!............. உன் எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசி" என்கிற மீட்பருடைய அழைப்பு வந்தது. மரணம் சமீபித்ததை அறிந்தவுடன் அவர்கள் மூத்த குமாரன் 'அப்பா! இயேசுநாதரை விசுவாசிக்கிறீர்களா? இயோநாதர் உங்களை அழைக்க வாசலண்டையில் நிற்கிறரா?' என்று கேட்கவே ஒவ்வொரு கேள்விக்கும் ஆம் என்று புன் சிரிப்போடு தலையை அசைத்ததுமல்லாமல் வியாதிப்படுக்கையில் தங்கள் கண்களுக்கு நேரே தொங்கவிடச் சொல்லியிருந்த இயேசுநாதர் சிலுவையில் அறையுண்ட காட்சிப் படத்தையும் கையை நீட்டிக் காண்பித்தார்கள். ஊழியம் செய்ய பெலன் இருக்குமட்டும் நான் என் ஆண்டவருக்கு ஊழியம் செய்வேன் என்று அடிக்கடி சொல்லுவார்கள். அந்தப்படியே பென்ஷன் பெற்றிருந்தும் பென்ஷன் கையில் வாங்காமலே 1923-ம் வருஷம் எப்ரல் மாதம் 19-ம் தேதி காலை 2 மணிக்கு தாங்கள் நேசித்த மனைவியும் பிள்ளைகளும் படுக்கையில் சூழ்ந்திருக்க பரம இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார்கள். கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம் அவர் பார்வைக்கு

அருமையானது."

அவர்கள் விட்டுப்போன மாம்சமானது செவ்வல் சர்க்கிள் சபையாரும், ஆஜாமிகளும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் சூழ்ந்துவர இந்துக்களுடைய விரோதங்களைச் சகித்து விடாமுயற்சியுடன் போராடி திருச்சபைச் கென்று சம்பாதித்த சேர்மாதேவிக்குச் சொந்தமான மிஷன் கல்லதைத் தோட்டத்தில் மூன்று குருமார்களால் மிகுந்த மரியாதையோடு வைக்கப்பட்டது.

கனம் ஐயரவர்களிடத்தில் காணப்பட்ட அருமையான குணங்கள் யாவரும் பின்பற்றக்கூடியது. தாழ்மை, பொறுமை, சாந்தகுணம், உற்சாகமான வழியம், ஊழியத்தில் வைராக்கியம், முகமலர்ச்சி, மற்றவர்களுக்கு நன்மை செய்தல் முதலிய நற்குணங்களை அவர்களை அறிந்த அனைவரும் நன்கறிவார்கள். மாற்றுகிற எந்த இடத்துக்கும் சந்தோஷமாய்ப் போவார்கள். எந்தத் துன்பத்தின் மத்தியிலும் சந்தோஷமாயும் உற்சாகமாயும் ஊழியம் செய்வார்கள். ஊழியமே அவர்கள் உயிராயிருந்தது. அவர்கள் மரித்த அன்று வந்தவர்களெல்லாரும் "இஸ்வேலில் ஒரு பிரபு விழுந்தார்" என்றும் "சிங்கத்தைப்போலொத்த ஓர் தைரியவான் நம்மை விட்டு மறைந்தார்" என்றும் பேசிக்கொண்டார்கள், அவர்கள் எப்போதும் அருமையாகப் பாடும் பாட்டு,

நான் உம்மைப்பற்றி ரட்சகா
வீண் வெட்கம் அடையேன்
பேரன்பைக் குறித்தாண்டவா
நான் சாட்சி கூறுவேன்,

பல்லவி:

சிலுவையண்டையில்
நம்பிவந்து நிற்கையில்
பாவப் பாரம் நீங்கி வாழ்வடைந்தேன்
எந்த நேரமும் என துள்ளத்திலும் –
பேரானந்தம் பொங்கிப் பாடுவேன்.

"உத்தமனை நோக்கி செம்மையானவனைப் பார்த்திரு, அவன் முடிவு சமாதானம். அவர்கள் மரித்தும் இன்னும் பேசுகிறார்கள்."

# உங்கள் வரலாற்று சங்கம்

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது 'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்' என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்ப்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்ப்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்று சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும்பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரிகளில் மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்றா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

1. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக்கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிகச் சிறப்பாக கடந்த ஒரு ஆண்டாக மிக சிறப்பாக வெளிவந்து கொண்டிருக்கிறது. மறைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1300 மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.

2. காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர். அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம் நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது.

ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் முதல் நூலகம் என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தார்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

3. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றது. குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் '**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**' என்ற வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் மறுபதிப்பு செய்து வெளியிடப்பட்டது. மேலும் தற்போது பத்துக்கும் மேற்பட்ட புத்தகங்களை மறுபதிப்பு செய்யும் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

4. தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள் அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்தத் சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணிசெய்த மற்றும் தங்கள் இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.

5. வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.

6. கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.

7. மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.

8. தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்பணித்த நம் இந்திய மிஷனிரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.

9. வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.

10. திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம்** இதவரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளிவருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்று அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

| | |
|---|---|
| Name: | Tinnevelly Christian Historical Society |
| Account number: | 17480200003684 |
| Bank: | Federal Bank |
| IFSC Code: | FDRL0001748 |

https://tchsportal.co.in/

Ph +91 91767 80001
Email: christianhistorical@gmail.com

**திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்**

# ‘வரலாற்று சுவடுகள்’ வாசகர்களுக்கு ஓர் இனிய நற்செய்தி !

**அறிமுகம்: கவிஞர் முனைவர் மோ. மைக்கேல் பாரடே**

நவீன இந்தியாவைக் கட்டி எழுப்பியதில் கிறிஸ்தவ அருட்பணியாளர்கள் ஆற்றிய அரும்பணிகள் விளைத்த புரட்சிகர மாற்றங்கள் பற்றிய அரிய அற்புதமான ஆராய்ச்சி நூலின் தமிழாக்கம் **‘வரலாற்று சுவடுகள்’** இதழில் இனி மாதம் தோறும் தொடராக வெளிவர உள்ளது என்ற மகிழ்ச்சியான நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறோம்.

**‘இந்தியா உருவாகுவதாக’** (Let there be India) என்ற தலைப்பிலமைந்த அரிய ஆய்வு நூல், கேரளத்தைச் சேர்ந்தவரும் மும்பையில் வாழ்பவருமான உலகறிந்த ஊடகவியலாளர்-வரலாற்றாசிரியர் - பன்னூலாசிரியர் - எழுச்சிமிகு நற்செய்தியாளர் எனப் பன்முகம் கொண்ட சகோதரர் பாபுவர்கீஸ் அவர்கள் மேற்கொண்ட ஆராய்ச்சியின் விளைவாக உதித்ததாகும். இந்நூல், நவீன இந்தியாவை கட்டி எழுப்புவதில் புனர் நிர்மாணம் செய்வதில் கிறிஸ்தவ வேதாகமமும் கிறிஸ்தவ மிஷனரிகளும் வழங்கிய அரிய பங்களிப்புகளையும் அவற்றின் விளைவாக நம் நாட்டில் உருவான புரட்சிகர மாற்றங்களையும் ஆய்வுநோக்கில் ஆதாரங்களோடு அள்ளி அள்ளி வழங்கும் ஓர் அறிவுலக அமுதசுரபி எனலாம். கிறிஸ்தவ அருட்பணியாளர்களின் பிரமிப்பூட்டும் தியாக சேவைகளின் அதிசயிக்கத்தக்க நற்பலன்களை எவரும் மறுக்கவோ மறைக்கவோ இயலாத வண்ணம் ஆய்வு பூர்வமாக நிறுவி, அருட்பணியாளர்களின் அருட்பணிகள் பற்றிய பொய்ப்பிரச்சாரங்களைத் தவிடு பொடியாக்கும் ஓர் அற்புத ஆய்வுப் பேழையாகும். இந்நூல் இந்திய மொழிகள், இலக்கியம், மொழியியல், கல்வி, அச்சு, ஊடக இதழியல், கலாச்சாரம் ஆகியவற்றில் மாறுதல்களை ஏற்படுத்தி, ஓர் நவீன இந்தியாவை உருவாக்குவதில் முன்னோடிகளாக திகழ்ந்த கிறிஸ்தவ பணியாளர்கள் மற்றும் வேதாகம மொழிப்பெயர்பாளர்களின் பங்களிப்பைப் பற்றிய வரலாறாகவும் சமகால இந்திய தேசிய மாற்றங்கள் பற்றிய ஓர் அரிய ஆய்வு முயற்சியாகவும் இந்நூல் திகழ்கிறது.

நூலாசிரியர் டாக்டர் பாபு காீம் குட்டிக்கல் வர்கீஸ், ஆங்கில இலக்கியத்தில் முதுகலைப் பட்டம் பெற்று, பின் ஒலிப்பியல், இந்திய மொழிகள், வணிக நிர்வாகம், ஊடக இதழியல் மற்றும் பொது உறவுகளில் முதுநிலைப் பட்டய படிப்புகளையும், மொழியியலில் டாக்டர் (Ph.D.) பட்டமும் பெற்றவர். இந்நூலுக்கு மூலவித்தாக விளங்கும் அவரது முனைவர் பட்டத்திற்கான கருப்பொருள் இந்திய மொழிகள், இலக்கியம், மொழியியல், கல்வி, அச்சு இதழியல் மற்றும் கலாச்சாரம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு வேதாகமத்தின் தாக்கம் என்பதாகும். அதனால் தான் இந்நூலுக்கு, **‘இந்தியா உருவாகுவதாக ! தேசத்தைக் கட்டி எழுப்புவதில் வேதாகமத்தின் தாக்கம்’** எனப் பெயரிடப்பட்டுள்ளது.

சகோ. பாபுவர்கீஸ் அவர்கள், Campus Crusae for Christ, Indian Evangelical Mission போன்ற அருட்பணி இயக்கங்களின் வரலாற்றை நூலாக வடித்தவர். இவர் எழுதிய ‘சத்தியத்தைச் சந்தித்தேன்’ என்ற பண்டிட் தர்மபிரகாஷ் சர்மா என்ற முன்னாள் இந்திய நாடாளுமன்ற உறுப்பினரின் மனமாற்றத்தைப் பற்றிய நூல் 9 மொழிகளில் மொழியாக்கம் செய்து வெளியிடப்பட்டது. பின்னர் திரைப்படமாக 11




மொழிகளில் திரையிடப்பட்டது. ஒரிசாவில் உயிருடன் எரிக்கப்பட்டு, இரத்த சாட்சிகளாய் மரித்த மிஷனரி கிரகாம் ஸ்டேன்ஸ் மற்றும் அவருடைய 2 மகன்களைப் பற்றி இவர் எழுதிய ‘உயிருடன் எரிக்கப்பட்டனர்’ என்ற நூல் 16 மொழிகளில் வெளியிடப்பட்டது.

**‘இந்தியா உருவாகுவதாக’** என்ற பெயர் கொண்ட இந்த அரிய ஆங்கில நூலை, சென்னையிலுள்ள Word of Christ பதிப்பகத்தார் தமிழாக்கம் செய்து சிறப்பான முறையில் வெளிக்கொணர்ந்துள்ளனர். சகோதரி ஜெயா சுசீலன் அவர்கள் நூலைத் தமிழாக்கம் செய்துள்ளார்கள். இம்மொழிபெயர்ப்பு ‘Let there be India’ என்ற விரிவான மூலநூலின் சுருக்கப் பதிப்பாக அதே பெயருடன் வெளிவந்த ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பாகும். இந்நூற்பிரதிகளைத் தமிழிலோ ஆங்கிலத்திலோ விலைகொடுத்து வாங்கிப் படிக்க விரும்புபவர்கள், Word of Christ Publications (WOC - தொலைபேசி 044- 26613242 / 4452640111, Email: christian-lifenature@gmail.com) நிறுவனத்தாரோடு தொடர்பு கொண்டு பெற்றுக் கொள்ளலாம்.

இனி, அடுத்த இதழ்முதல் திங்கள் தோறும் இந்நூல், நமது **‘கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்’** இதழில் அத்தியாயம் அத்தியாயமாகத் தொடர்ந்து வெளிவரும். இதனை நம் இதழில் வெளியிட நமக்கு அனுமதி வழங்கிய மூல நூலாசிரியர் சகோ. பாபு வர்கீஸ் அவர்களுக்கும், தமிழாக்கத்தை வெளியிட்ட சென்னை Word of Christ பதிப்பகத்தாருக்கும் நம் நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறோம்.

